ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 T I**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2010 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2010 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2010

ගිණුම්කරණය I
கணக்கீடு I
Accounting I

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

சுட்டெண் : ..........................................

பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்

| பகுதி I இற்காக | |
|---|---|
| வினா இல. | புள்ளிகள் |
| 01 - 20 | |
| 21 - 40 | |
| மொத்தம் | |

பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல்கள் :

- பகுதி I இலுள்ள **எல்லா வினாக்களுக்கும் இவ்வினாத் தாளிலேயே** விடைகள் எழுதுக. ஒவ்வொரு வினாவுக்கும் 1 புள்ளி வழங்கப்படும்.
- பகுதி I இன் விடைத்தாளை பகுதி II இன் **விடைத்தாளுடன் இணைத்துக்** கையளிக்க.

## பகுதி I

● **01** தொடக்கம் **20** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிக்கும்போது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவு செய்து அதற்கு முன்னுள்ள கூட்டில் '✓' என அடையாளமிடுக. உ- ம்: ✓

1. கம்பனியொன்று 2009.04.01 இல் ரூ. 800 000 இற்கு உபகரணமொன்றைக் கடனுக்குக் கொள்வனவு செய்தது. 2010.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்காக இவ் உபகரணத்திற்கு வருடாந்தம் 10% பெறுமானத் தேய்விடப்பட்டது. கீழே தரப்பட்டுள்ள சமன்பாடுகளில் எது மேற்கூறப்பட்ட கொடுக்கல் வாங்கல்களின் தாக்கத்தைக் காட்டுகின்றது?

| | சொத்துகள் | = | பொறுப்புகள் | + உரிமையாண்மை |
|---|---|---|---|---|
| (1) | + 800 000 | = | + 880 000 | − 80 000 |
| (2) | + 800 000 | = | + 720 000 | + 80 000 |
| (3) | + 720 000 | = | + 800 000 | − 80 000 |
| (4) | + 720 000 | = | + 720 000 | − |
| (5) | + 720 000 | = | − | + 720 000 |

2. கீழே தரப்பட்டுள்ள வியாபார நிறுவனமொன்றைப் பற்றிய தகவல்களில் எது அவ்வியாபாரத்தின் வியாபார கடன்கொடுத்தோரின் அதிகளவு கவனத்தை ஈர்க்கும்?
   (1) வருடாந்த பங்குலாபங்கள்
   (2) வருடத்திற்கான இலாபம்
   (3) கடனைச் செலுத்தித் தீர்க்க வேண்டிய காலத்தில் அதனைச் செலுத்துவதற்கான இயலுமை
   (4) வியாபார நிறுவனத்தை மறுசீரமைப்பதற்கான இயலுமை
   (5) மீள்மதிப்பீட்டு மேலதிகம்

3. கீழே தரப்பட்டுள்ள நிதிக்கூற்றுக்களின் பகுதி/ பகுதிகளில் எது/ எவை குறித்த தினத்தில் தயாரிக்கப்படுகின்றது?
   A - ஐந்தொகை
   B - வருமானக் கூற்று
   C - உரிமையாண்மை மாற்றத்திற்கான கூற்று
   D - காசுப் பாய்ச்சல் கூற்று
   (1) A மாத்திரம்.
   (2) C மாத்திரம்.
   (3) A, C ஆகியன மாத்திரம்.
   (4) B, D ஆகியன மாத்திரம்.
   (5) A, B, D ஆகியன மாத்திரம்.

[பக். 2 ஐப் பார்க்க

4. குறித்த ஒரு கணக்காண்டு காலத்தில் பற்றுகளை மேற்கொள்ளாத நிலையிலும் மேலதிக மூலதனத்தை இடாத நிலையிலும் கீழே தரப்பட்டுள்ள எந்நிலைமைகளில் நிறுவனம் இலாபத்தை நிச்சயமாகக் காட்டும்?
   (1) குறித்த காலத்தில் மொத்த சொத்துகள் அதிகரிக்கும்போது
   (2) குறித்த காலத்தில் மொத்த பொறுப்புகள் அதிகரிக்கும்போது
   (3) குறித்த கால முடிவில் மொத்த சொத்துக்கள் மொத்த பொறுப்பினைவிட அதிகமாக இருக்கும்போது
   (4) குறித்த கால முடிவில் தொழிற்படு மூலதனம் குறைவடையும்போது
   (5) மொத்த சொத்துக்களில் ஏற்பட்ட அதிகரிப்புப்பானது மொத்தப் பொறுப்புக்களில் ஏற்பட்ட அதிகரிப்பினை விடக் கூடுதலாக காணப்படும்போது

5. கீழே தரப்பட்டுள்ள கணக்கீட்டுச் சமன்பாடுகளில் எது சரியானது?
   A - தேறிய சொத்துகள் = உரிமையாண்மை
   B - சொத்துகள் + வருமானங்கள் = உரிமையாண்மை + பொறுப்புகள் + செலவுகள்
   C - சொத்துகள் + செலவுகள் = உரிமையாண்மை + பொறுப்புகள் + வருமானங்கள்
   D - தேறிய சொத்துகள் = மொத்த சொத்துகள் − நடைமுறையற்ற பொறுப்புகள் − நடைமுறைப் பொறுப்புகள்
   (1) B, C ஆகியன மாத்திரம்
   (2) B, C, D ஆகியன மாத்திரம்
   (3) A, C, D ஆகியன மாத்திரம்
   (4) A, B, C ஆகியன மாத்திரம்
   (5) A, B, C, D ஆகிய எல்லாம்

6. கணக்கீட்டுச் செயன்முறையில் கீழே தரப்பட்டுள்ள செயற்பாடுகளில் சரியான வரிசைமுறை என்ன?
   A - மூடும் பதிவுகளைத் தயாரித்தல்
   B - கொடுக்கல் வாங்கல்களைப் பேரேட்டுக்கு மாற்றுதல்
   C - கொடுக்கல் வாங்கல்களை நாட்குறிப்புகளில் பதிவிடுதல்
   D - நிதிக் கூற்றுக்களைத் தயாரித்தல்
   (1) C, A, B, D
   (2) D, C, A, B
   (3) B, A, D, C
   (4) C, B, A, D
   (5) C, B, D, A

7. 2010.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான பின்வரும் தகவல்கள் உற்பத்தி நிறுவனமொன்றிலிருந்து பெறப்பட்டதாகும்.

| | ரூ. |
|---|---|
| குறைவேலை - 2009.04.01 | 7 000 |
| குறைவேலை - 2010.03.31 | 10 000 |
| பயன்படுத்திய நேர் மூலப் பொருட்கள் | 3 000 |
| நேர்க் கூலி | 2 000 |
| தொழிற்சாலை மேந்தலைகள் | 2 000 |

   உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களின் கிரயம் என்ன?
   (1) ரூ. 3 000
   (2) ரூ. 4 000
   (3) ரூ. 5 000
   (4) ரூ. 6 000
   (5) ரூ. 7 000

8. தனி வியாபாரமொன்றின் கீழே தரப்பட்டுள்ள தகவல்களின் அடிப்படையில் 2010.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான உழைக்கப்பட்ட இலாபம் என்ன?
   2009.04.01 இல் உள்ளபடியான உரிமையாண்மை ரூ. 500 000 ஆகும்.
   2010. 03. 31 இல் மொத்தச் சொத்துகளும் மொத்தப் பொறுப்புகளும் முறையே ரூ. 800 000, ரூ. 200 000 ஆகும்.
   இக் கணக்காண்டு காலத்தினுள் மேற்கொண்ட பற்றுகள் ரூ. 30,000.
   (1) ரூ. 100 000
   (2) ரூ. 130 000
   (3) ரூ. 160 000
   (4) ரூ. 500 000
   (5) ரூ. 600 000

[பக். 3 ஐப் பார்க்க

9. கீழே தரப்பட்டுள்ள தகவல்களின் அடிப்படையில் 2010.03.31 இல் உள்ளபடியான ஐந்தொகையில் காட்டப்பட வேண்டிய நிறுவனத்தின் காசு மீதி என்ன ?

| | |
|---|---|
| 2010.03.31 இல் வங்கிக் கூற்று மீதியின் படி வங்கி மேலதிகப் பற்று | ரூ. (10 000) |
| 2010.03.31 இல் வைப்பிலிடப்பட்டதும் ஆனால் வசூலிக்கப்படாத காசோலைகள் | ரூ. 45 000 |
| 2010.03.31 இல் வழங்கப்பட்டதும் ஆனால் கொடுப்பனவுக்காகச் சமர்ப்பிக்கப்படாத காசோலைகள் | ரூ. 30 000 |
| கடன்பட்டோர்களால் நேரடியாக வங்கியில் வைப்புச் செய்யப்பட்ட காசோலைகள் | ரூ. 15 000 |

(1) ரூ. 5 000
(2) ரூ. (20 000)
(3) ரூ. 25 000
(4) ரூ. (25 000)
(5) ரூ. (40 000)

● **10, 11** ஆம் வினாக்களுக்கு விடையளிப்பதற்குக் கீழே தரப்பட்டுள்ள தகவல்களைப் பயன்படுத்துக.

2010.03.31 இல் நிறுவனம் ரூ. 42 000 கிரயமுடையதும் ரூ. 28 000 திரண்ட பெறுமானத் தேய்வையும் கொண்ட இயந்திரமொன்றை இது போன்ற இன்னோர் இயந்திரமொன்றுக்காக அதே தினத்தில் பரிமாற்றம் செய்தது. பழைய இயந்திரத்தின் பரிமாற்ற விலை இதன் முன்கொண்டுவரும் தொகை என ஏற்றுக்கொள்ளப்பட்டது. புதிய இயந்திரத்தின் விலை ரூ. 44 000 ஆகும். இதன் வேறுபாடு காசாகச் செலுத்தப்பட்டது.

10. இப்பரிமாற்றம் தொடர்பாகக் கீழே தரப்பட்டுள்ள கூற்றுகளில் எது உண்மையானது ?

(1) ரூ. 12 000 நட்டம் எழும்
(2) ரூ. 14 000 இலாபம் எழும்
(3) ரூ. 14 000 நட்டம் எழும்
(4) ரூ. 30 000 நட்டம் எழும்
(5) இலாபமோ நட்டமோ எழாத நிலை

11. இப்பரிமாற்றம் காரணமாக இந்நிறுவனத்தின் இயந்திரத்தின் முன்கொண்டுவரும் தொகையில் ஏற்பட்ட தேறிய அதிகரிப்பு என்ன ?

(1) ரூ. 14 000
(2) ரூ. 28 000
(3) ரூ. 30 000
(4) ரூ. 42 000
(5) ரூ. 44 000

12. இயந்திரங்களை விற்பனை செய்யும் கம்பனியொன்று ரூ. 1 800 000 கிரயத்தைக் கொண்டிருந்த இயந்திரமொன்றை 2010 மார்ச் 01 இல் ரூ. 2 000 000 இற்கு விற்பனை செய்தது. இக்கொடுக்கல் வாங்கலைத் தீர்க்கும்போது பாவித்த இயந்திரமொன்று ஏற்றுக்கொள்ளப்பட்ட ரூ. 300 000 விலைக்கும் காசு ரூ. 700 000 உம் வாங்குனரிடமிருந்து பெற்றுக் கொள்ளப்பட்டது. மிகுதித் தொகையை வாங்குனர் மூன்று மாத காலத்திற்குப் பின்னர் தீர்ப்பதற்கு உடன்பட்டார். மேற்கூறிய கொடுக்கல் வாங்கல் காரணமாக 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான இனங் காண வேண்டிய வருமானம் என்ன ?

(1) ரூ. 300 000
(2) ரூ. 700 000
(3) ரூ. 1 000 000
(4) ரூ. 1 800 000
(5) ரூ. 2 000 000

[பக். 4 ஐப் பார்க்க

13. மோட்டார் வாகன வியாபாரக் கம்பனியொன்று பாவனை செய்யப்பட்ட கார் ஒன்றினை 2010 மே 30 இல் ரூ. 1 300 000 இற்கு வாங்கியதுடன் தரகருக்கு தரகாக ரூ. 20 000 ஐ செலுத்தியது. இறக்குமதி வரியின் திடீர் குறைப்பின் காரணமாக 2010 யூன் 30 இல் இக்காரின் சந்தைப் பெறுமதி ரூ. 800 000 என மதிப்பீடு செய்யப்பட்டது. இத்திகதியில் இக்காரின் மதிப்பிடப்பட்ட விற்பனைத் தரகு ரூ. 30 000.
2010 யூன் 30 இல் முறையே இக்காரின் கிரயமும் தேறிய தேறக்கூடிய பெறுமதியும் என்ன ?
(1) ரூ. 1 300 000 உம் ரூ. 770 000 உம்
(2) ரூ. 1 320 000 உம் ரூ. 780 000 உம்
(3) ரூ. 1 000 000 உம் ரூ. 830 000 உம்
(4) ரூ. 1 320 000 உம் ரூ. 770 000 உம்
(5) ரூ. 1 320 000 உம் ரூ. 800 000 உம்

14. நிலுவை (accrual) கணக்கீடு தொடர்பாகக் கீழே தரப்பட்டுள்ள கூற்றுகளில் எது/எவை சரியானது ?
A - தேறிய இலாபம் என்பது செலவுகளுக்கான காசு வெளிப்பாய்ச்சலை விட வருமானங்களினால் எழும் காசு உட்பாய்ச்சல்களின் மேலதிகமாகும்.
B - காலமொன்றுக்கான வருமானம் இனங்காணப்படுவது அதனை உழைக்கும்போதாகும்.
C - காசு அடிப்படையை விட நிலுவை அடிப்படை பொருளாதாரப் பெறுபேற்றை சிறந்த முறையில் மதிப்பீடு செய்கின்றது.
(1) A மாத்திரம்.
(2) B மாத்திரம்.
(3) C மாத்திரம்.
(4) A, B ஆகியன மாத்திரம்.
(5) B, C ஆகியன மாத்திரம்.

15. கணக்காண்டு முடிவில் கீழே தரப்பட்டுள்ள கணக்கீட்டு சோடிகளில் எச்சோடி முறையே மூடியவையாகவும் மீதியை முன்கொண்டு செல்பவையாகவும் காணப்படுகின்றன ?

| | மூடியவை | மீதி முன்கொண்டு சென்றது |
|---|---|---|
| (1) | சொத்து | செலவு |
| (2) | செலவு | சொத்து |
| (3) | பொறுப்பு | வருமானம் |
| (4) | வருமானம் | செலவு |
| (5) | உரிமையாண்மை | செலவு |

16. அனு, தனு, மது ஆகியோர் இலாபநட்டத்தைச் சமனாகப் பங்கிட்டு பங்குடைமையொன்றை நடாத்தி வருகின்றனர். 2010 மார்ச் 31 இல் அனு பங்குடைமையிலிருந்து இளைப்பாறினார். இத்தினத்தில் வியாபாரத்தின் நன்மதிப்பு மூலதனக் கணக்குகளில் சீராக்கம் செய்யப்பட்டது. தனுவும் மதுவும் வியாபாரத்தைத் தொடர்ந்தும் கொண்டு நடத்தத் தீர்மானித்தனர்.

| மூலதனக் கணக்கு மீதிகள் | தனு (ரூ.) | மது (ரூ.) |
|---|---|---|
| சீராக்கத்திற்கு முன்னரான நன்மதிப்பு | 200 000 | 150 000 |
| சீராக்கத்திற்கு பின்னரான நன்மதிப்பு | 160 000 | 140 000 |

பங்காளர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மொத்த நன்மதிப்புத் தொகை என்ன ?
(1) ரூ. 10 000
(2) ரூ. 25 000
(3) ரூ. 50 000
(4) ரூ. 75 000
(5) ரூ. 150 000

[பக். 5 ஐப் பார்க்க

17. நிமாலும் பாலாவும் இலாப நட்டங்களைச் சமனாகப் பகிரும் பங்காளர்களாவர். நிமால் பாலாவுக்கு பங்குடைமை வியாபாரத்திலிருந்து ஆகக் குறைந்த வருடாந்த வருமானத்திற்கு உறுதி வழங்கினார். மேலே கூறப்பட்ட உடன்பாட்டிற்கமைய நிமால், பாலாவுக்கிடையிலான வருடத்திற்கான இலாபப் பகிர்வு கீழே தரப்பட்டுள்ளது.

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| வருடத்திற்கான இலாபம் | | 900 000 |
| இலாபப் பங்கு - நிமால் | 400 000 | |
| - பாலா | 500 000 | 900 000 |

நிமாலினால் பாலாவுக்கு உறுதியளிக்கப்பட்ட வருடாந்த வருமானத் தொகை என்ன ?

(1) ரூ. 50 000
(2) ரூ. 100 000
(3) ரூ. 400 000
(4) ரூ. 500 000
(5) ரூ. 900 000

18. பவா, நிசா ஆகியோரால் இலாப நட்டத்தைச் சமனாகப் பகிர்ந்து நடாத்தி வந்த பங்குடைமையில் சுபா என்பவர் இலாப நட்டத்தில் 1/3 பங்கும், சம்பளமாக மாதாந்தம் ரூ. 10 000 உம் பெறும் வகையில் 2009 செப்ரெம்பர் 30 இல் பங்காளராகச் சேர்ந்து கொண்டார். 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான இலாபம் ரூ. 600 000 ஆகும். இத்தொகை வருடம் முழுவதும் ஒரே சீரான முறையில் உழைக்கப்பட்டதாகும்.
2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான இவ்வியாபாரத்திலிருந்து முறையே பவா, சுபா ஆகியோர் பெற்றுக்கொண்ட வருமானம் என்ன?

(1) ரூ. 80 000, ரூ. 140 000 ஆகும்.
(2) ரூ. 100 000, ரூ. 100 000 ஆகும்.
(3) ரூ. 230 000, ரூ. 140 000 ஆகும்.
(4) ரூ. 230 000, ரூ. 150 000 ஆகும்.
(5) ரூ. 240 000, ரூ. 150 000 ஆகும்.

● **19** ஆம் **20** ஆம் வினாக்களுக்கு விடையளிப்பதற்குக் கீழே தரப்பட்டுள்ள தகவல்களைப் பயன்படுத்துக.

2010 யூன் மாதத்திற்கான நிறுவனமொன்றின் சுருக்கப்பட்ட சம்பளப்பட்டியல் விவரம் கீழே தரப்பட்டுள்ளது.

| விவரம் | ரூ. |
|---|---|
| அடிப்படைச் சம்பளம் | 100 000 |
| உதவித் தொகை | 25 000 |
| கழிக்கப்பட்ட ஊழியர் சேமலாபநிதி | 8 000 |
| கழிக்கப்பட்ட புத்தாண்டு முற்பணங்கள் | 7 000 |
| தேறிய சம்பளம் | 110 000 |
| தொழில் தருணரின் ஊழியர் சேமலாப நிதிப் பங்களிப்பு | 12 000 |

19. நிறுவனத்தின் யூன் மாத்திற்கான ஊழியர் தொடர்பான மொத்தச் செலவுகள் எவ்வளவு?

(1) ரூ. 100 000
(2) ரூ. 108 000
(3) ரூ. 110 000
(4) ரூ. 125 000
(5) ரூ. 137 000

20. யூன் மாதத்திற்கான ஊழியர் சேமலாபநிதிச் செலவு தொடர்பாகப் பின்வருவனவற்றுள் எது சரியான கணக்கீட்டுப் பதிவினைக் காட்டுகின்றது?

| | ஊழியர் சேமலாபநிதி செலவுக் கணக்கு (வரவு) (ரூ.) | சம்பளக் கணக்கு (வரவு) (ரூ.) | ஊழியர் சேமலாபநிதி கொடுப்பனவுக் கணக்கு (செலவு) (ரூ.) |
|---|---|---|---|
| (1) | 8 000 | 8 000 | 16 000 |
| (2) | 8 000 | — | 8 000 |
| (3) | 12 000 | 12 000 | 24 000 |
| (4) | 12 000 | — | 12 000 |
| (5) | 12 000 | 8 000 | 20 000 |

[பக். 6 ஐப் பார்க்க

- **21** தொடக்கம் **35** வரையுள்ள வினாக்களுக்கு சுருக்கமாக விடையளிக்குக.

21. வியாபார உரிமையாளர் தனது சொந்த வீட்டினைத் திருத்துவதற்காக வங்கியிலிருந்து பெற்றுக் கொண்ட கடன்தொகையை தனது வியாபார நிறுவனத்தின் பொறுப்புக்களில் உள்ளடக்கியிருந்தால் இந்நிலையில் நிறுவனத்தினால் மீறப்பட்டுள்ள கணக்கீட்டு எண்ணக்கருவைக் குறிப்பிடுக.

.................................................................................................................................

22. பொது விலைமட்டம் தொடர்ச்சியாக அதிகரிக்கையில் வரலாற்றுக் கிரய அடிப்படையில் நிதிக் கூற்றுகளைத் தயாரிக்கும்போது தாக்கத்திற்கு உட்படும் பிரதான கணக்கீட்டுத் தகவலின் பண்புசார் இயல்பு ஒன்றினைக் குறிப்பிடுக.

.................................................................................................................................

23. ரூ. 21 000 விற்பனை விலைப் பட்டியலொன்று விற்பனைகள் நாளேட்டில் ரூ. 12 000 எனப் பதிவிடப்பட்டதுடன் இது பொதுப் பேரேட்டுக்கு மாற்றப்பட்டுள்ளது.

(அ) மேலே கூறப்பட்ட கணக்கீட்டுப் பிழையை திருத்துவதற்கான நாட்குறிப்புப் பதிவினை எழுதுக (விளம்பல் அவசியமில்லை).

.................................................................................................................................

.................................................................................................................................

(ஆ) இப்பிழை **திருத்தப்படாமல்** இருப்பின், எத்தொகையினால் இலாபம் மாற்றமடையும் என்பதையும் இத்தொகை இலாபத்தில் ஒரு அதிகரிப்பையா அல்லது குறைவையா அல்லது மாற்றமின்மையையா ஏற்படுத்தும் என்பதையும் குறிப்பிடுக.

ரூ. ............................................, **அதிகரிப்பு/ குறைவு/ மாற்றமின்மை** ............................................

24. கீழே தரப்பட்டுள்ள செலவினங்கள் நிறுவனமொன்றினால் வாங்கப்பட்ட உபகரணமொன்றைத் தொழிற்சாலையில் பொருத்தி முடிக்கும் காலம் வரைக்கும் எழுந்ததாகும்.

| | (ரூ.) |
|---|---|
| கொள்வனவு விலை | 900 000 |
| தொழிற்சாலை வரைக்குமான போக்குவரத்துக் கிரயம் | 10 000 |
| பொருத்துதல் கிரயம் | 40 000 |
| இப் போக்குவரத்தில் வேகக்கட்டுப்பாட்டை மீறியமைக்காக நீதிமன்றத்துக்குச் செலுத்திய தண்டனைப் பணம் | 5 000 |
| உபகரணத்தைப் பொருத்தும்போது ஏற்பட்ட சேதம் காரணமாக தொழிற்சாலைச் சுவரினைத் திருத்துவதற்கு ஏற்பட்ட செலவு | 45 000 |

இவ் உபகரணத்தின் தொடக்கக் கிரயம் என்ன ? ரூ. ..........................................................

25. ஒரு குறித்த கணக்காண்டு காலத்தில் சொத்தொன்றின் பெறுமானத் தேய்வுத் தொகையை கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு காரணிகளும் தாக்கத்தை ஏற்படுத்துமா என்பதை (✓) எனக் குறியிடுவதன் மூலம் குறிப்பிடுக.

| காரணி | தாக்கம் | தாக்கமின்மை |
|---|---|---|
| (1) மதிப்பீடு செய்யப்பட்ட பயன்தரு ஆயுட் காலம் | | |
| (2) பராமரிப்புக் கிரயம் | | |
| (3) மதிப்பீடு செய்யப்பட்ட எஞ்சிய பெறுமதி | | |
| (4) பெறுமானத் தேய்விடல் முறை | | |

[பக். 7 ஐப் பார்க்க

26. கீழே தரப்பட்டுள்ள தகவல்கள் வியாபாரமொன்றின் அலுவலக எழுதுபொருட்கள் தொடர்பானதாகும்.

| | (ரூ.) |
|---|---|
| 2009.04. 01 இல் எழுதுபொருட்கள் கணக்கு மீதி | 6 000 |
| இக்கணக்காண்டு காலத்திற்கான எழுதுபொருட்கள் கொள்வனவு | 30 000 |
| 2010.03. 31 இல் பாவனை செய்யப்படாத நல்ல நிலையிலுள்ள எழுதுபொருட்களின் பெறுமதி | 4 000 |
| இக்கணக்காண்டு காலத்தினுள் சேதமடைந்த எழுதுபொருட்கள் | 1 000 |
| சேதமடைந்த எல்லா எழுதுபொருட்களையும் விற்பனை செய்ததன் மூலம் பெற்றுக் கொண்டது | 300 |

வருடத்திற்கான மொத்த எழுதுபொருட்களின் செலவினைக் கணிப்பிடுக.

..........................................................................................

27. கறுப்பு, வெள்ளை ஆகியோர்களது பங்குடைமை வியாபாரத்தில் சிவப்பு என்பவர் 2010.03.31 இல் பங்காளராகச் சேர்ந்தபோது இவ்வியாபாரத்தின் நடைமுறையற்ற சொத்துக்களை மீள் மதிப்பீடு செய்ததினால் பங்குடைமையின் தேறிய சொத்துக்கள் ரூ. 600 000 இலிருந்து ரூ. 1 000 000 அதிகரித்தது. இதே தினத்தில் சிவப்பு ரூ. 200 000 ஐ தனது மூலதனமாக வியாபாரத்திற்குக் கொண்டு வந்தார். 2010.03.31 இல் கறுப்பு, வெள்ளை ஆகிய இருவரினதும் மொத்த நடைமுறைக் கணக்கு மீதிகளின் மொத்தத் தொகை ரூ. 300 000 ஆகக் காணப்பட்டது. 2010.03.31 இல் புதிய பங்குடைமை தொடர்பாக பங்காளர்களின் மூலதனக் கணக்கு மீதிகளின் மொத்த தொகையையும் மொத்த தேறிய சொத்துக்களையும் கணிப்பிடுக.

(அ) மூலதனக் கணக்கு மீதிகளின் மொத்த தொகை ரூ. ..............................

(ஆ) மொத்த தேறிய சொத்துகள் ரூ. ..............................

28. வியாபாரமொன்றின் பங்குடைமை ஒப்பந்தத்தின்படி பங்காளரொருவரினால் இடப்படும் மூலதனத்திற்கு இவர் வருடாந்தம் 10% வட்டியைப் பெறுவதற்கு உரித்துடையவராவர். வெளிச் செல்லும் பங்காளராகிய பியால் மேற்கூறப்பட்ட வாசகத்தின் படி தான் இளைப்பாறும் நேரத்தில் தனக்கான உரிமைத் தொகையைத் தீர்வு செய்தல் வேண்டும் இல்லையேல் இத்தொகைக்கு 10% வட்டியை செலுத்த வேண்டுமென மற்றைய பங்காளர்களை வற்புறுத்துகின்றார். பியாலுக்குச் செலுத்த வேண்டிய இத்தொகையை இவர் இளைப்பாறும் நேரத்தில் தீர்வு செய்யவில்லையெனில் பியால் தனது தொகைக்கு 10% வட்டியைப் பெறுவதற்கு உரித்துடையவரா என்பதைக் காரணத்துடன் குறிப்பிடுக.

..........................................................................................

..........................................................................................

29. ஐந்தொகையில் நடைமுறை, நடைமுறையற்ற என்ற அடிப்படையில் சொத்துகளையும் பொறுப்புகளையும் வகைப்படுத்துவதற்கான அடிப்படையை வழங்கும் கணக்கீட்டு எண்ணக்கருவைக் குறிப்பிடுக.

..........................................................................................

30. நிதிக் கூற்றில் சொத்தொன்றினை இனங்காணும் பொருட்டு திருப்திப்படுத்த வேண்டிய அவசியமான **இரண்டு** நியதிகளைக் குறிப்பிடுக.

1. ..........................................................................................

2. ..........................................................................................

31. கடன்பட்டோர் மீதியான ரூ. 10 000 ஐ முழுமையாகத் தீர்வு செய்யும் பொருட்டு கடன்பட்டோரிடமிருந்து ரூ. 8 000 ஏற்றுக்கொள்ளப்பட்டது. இக்கொடுக்கல் வாங்கலைப் பதிவிடுவதற்கான நாட்குறிப்புப் பதிவினை (காசு உட்பட) எழுதுக (விளம்பல் அவசியமில்லை).

..........................................................................................

..........................................................................................

..........................................................................................

[பக். 8 ஐப் பார்க்க

32. 2010.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான வியாபாரமொன்றின் பின்வரும் தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன

| | (ரூ.'000) |
|---|---|
| காசு விற்பனைகள் | 500 000 |
| கடன்பட்டோரிடமிருந்து சேகரிக்கப்பட்ட காசு | 490 000 |

ஒவ்வொரு வருட முடிவிலுமுள்ள கடன்பட்டோர் மீதியில் அறவிடமுடியாக் கடனுக்கும் ஐயக் கடனுக்குமாக 1% ஏற்படுத்துவது என்பது கொள்கையாகும்.

2010. 03. 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான அறவிடமுடியாக் கடனுக்கும், ஐயக்கடனுக்குமான செலவினத்தைக் கணிக்குக.

.......................................................................................................................................

33. கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு கொடுக்கல் வாங்கல்களைப் பதிவிடுவதற்குப் பயன்படுத்தப்படும் பொருத்தமான மூலப் பதிவேடு, மூல ஆவணத்தையும் குறிப்பிடுக.

| கொடுக்கல் வாங்கல் | மூலப் பதிவேடு | மூல ஆவணம் |
|---|---|---|
| (i) உரிமையாளரினால் மூலதனமாக அறிமுகப்படுத்தப்படும் காசு | ............................ | ............................ |
| (ii) கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்ட பொருட்களைத் வழங்குனருக்குத் திருப்பி அனுப்புதல் | ............................ | ............................ |
| (iii) கடனுக்குக் கொள்வனவு செய்யப்படும் எழுதுகருவிகள் | ............................ | ............................ |
| (iv) ஐயக் கடன்களுக்கான ஏற்பாடு | ............................ | ............................ |

34. நிறுவனமொன்று 2009.03.31 இல் பூச்சிய பெறுமதியை முன்கொண்டுவரும் தொகையைக் கொண்டிருந்த பாவனை செய்யப்பட்ட மோட்டார் வாகனமொன்றை 2009.09.30 இல் ரூ. 150 000 இற்கு விற்பனை செய்த அதே திகதியில் ரூ. 500 000 இற்கு புதிய மோட்டார் வாகனமொன்றையும் வாங்கியது. மோட்டார் வாகனங்களுக்கான பெறுமானத் தேய்வு வருடாந்தம் கிரயத்தில் 20% ஆகும்.

(அ) மேற்கூறப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் காரணமாக 2010.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான பெறுமானத் தேய்வு எத்தொகையினால் அதிகரிக்கும் எனக் குறிப்பிடுக.

.......................................................................................................................................

(ஆ) மோட்டார் வாகன விற்பனை மூலம் எழுந்த இலாபம் அல்லது நட்டத்தைக் கணிப்பிடுக.

ரூ. .................................................................................................................................

35. ஒரு கணக்காண்டு முடிவில் காசுப் புத்தக மீதியும் வங்கிக் கூற்றில் காணப்படுகின்ற மீதியும் சமனானதாகக் காணப்படும் போது வங்கிக் கணக்கிணக்கக்கூற்று தயாரிக்க வேண்டியது அவசியமானதா என்பதைக் காரணத்துடன் குறிப்பிடுக.

.......................................................................................................................................

.......................................................................................................................................

- **36** தொடக்கம் **40** வரையான கூற்றுகள் **சரியா** அல்லது **பிழையா** எனக் குறிப்பிடுக.

36. நிதிக் கூற்றுக்களிலுள்ள எல்லாக் கூறுகளும் நிலுவை அடிப்படையில் தயாரிக்கப்படுகின்றன. (..................)

37. இலங்கை கணக்கீட்டு நியமம் இல. 5 இன் படி வழமையான வியாபாரத்தின் விற்பனைப் பொருட்களுக்கான உற்பத்திச் செய்முறையில் காணப்படும் சொத்துகளைச் சரக்கிருப்பு உள்ளடக்குவதில்லை. (..................)

38. 'விற்பனை செய் அன்றேல் திருப்பி அனுப்புக' எனும் அடிப்படையில் அனுப்பப்படும் பொருள்கள் முகவருக்கு அனுப்பியதுமே வருமானமாக இனங்காணப்படுதல் வேண்டும். (..................)

39. பெறுமானத்தேய்விடத்தக்க சொத்துக்களின் எஞ்சிய பெறுமதி அதன் பெறுமானத் தேய்விடத்தக்க தொகையை விட உயர்வாகக் காணப்படுமாயின், இச்சொத்தைப் பெறுமானத் தேய்விட வேண்டிய அவசியமில்லை. (..................)

40. எல்லா வியாபார நிறுவனங்களும் இலங்கைக் கணக்கீட்டு நியமங்களுக்குக் கட்டுப்படல் வேண்டும். (..................)

* *

[பக். 9 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 T I**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2010 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2010 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2010

ගිණුම්කරණය I (II කොටස)
கணக்கீடு I (பகுதி II)
**Accounting I (Part II)**

**அறிவுறுத்தல்கள் :**
- ※ **முதலாம்** வினாவுக்கும் வேறு **நான்கு** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ※ ஒவ்வொரு விடையும் **புதியதொரு தாளில்** ஆரம்பிக்கப்படுதல் வேண்டும்.
- ※ ஒவ்வொரு பொருத்தமான செய்முறைகள் விடைகளுடன் இணைக்கப்படல் வேண்டும்.

1. அருண், சுரேஷ் ஆகியோர்களது பங்குடைமையில் விமல் ஒரு பங்காளராக 2009 ஒக்ரோபர் 01 இல் பங்காளராகச் சேர்ந்தபோது பின்வரும் தகவல்கள் தரப்பட்டிருந்தன.

(i) விமல் பங்குடைமையில் சேர்ந்த போது பின்வரும் நிபந்தனைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன:

- பங்காளர்கள் இலாப நட்டங்களைச் சமமாக பகிர்வு செய்கின்றனர்.
- பங்காளர்கள் மூலதன வட்டி பெறுவதற்கு உரித்துடையவர்களில்லை
- அருண், சுரேஷ், விமல் ஆகியோர் மாதாந்தம் முறையே ரூ. 5 000, ரூ. 3 000, ரூ. 2 000 சம்பளம் பெறுவதற்கு உரித்துடையவர்களாவர்.
- பங்காளர்களினால் வழங்கப்பட்ட கடன்களுக்கு வருடாந்தம் 10% வட்டி செலுத்தப்படல் வேண்டும். இத்தினத்திற்கு முன்னராகப் பெறப்பட்ட கடன்களுக்கும் இப்புதிய வட்டி வீதம் பொருத்தமானதாகும்.
- விமல் தனது மூலதனத்தை பின்வரும் கொடுப்பனவுகள் மூலமாக பங்களிப்புச் செய்தல் வேண்டும் ;
  - பங்குடைமையினால் சுரேஷிடமிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட கடனை பகுதியாக சுரேஷிற்குக் கொடுத்து தீர்ப்பதற்கு ரூ. 300 000
  - வியாபாரத்திற்குக் காசாக ரூ. 200 000
- 2009 ஒக்ரோபர் 01 இல் பங்குடைமையின் நன்மதிப்பு ரூ. 300 000 ஆக மதிப்பீடு செய்யப்படல் வேண்டும். ஆனால் பேரேட்டில் நன்மதிப்புக் கணக்கு பேணப்படுவதில்லை.
- 2009 ஒக்ரோபர் 01 இல் நிலத்தின், முன்கொண்டு வரும் தொகையானது ரூ. 160 000 இனால் அதிகரிக்கப்படல் வேண்டும்.
- நன்மதிப்பும், நிலத்தின் முன்கொண்டு வரும் தொகையின் அதிகரிப்பும் பங்காளர்களின் மூலதனக் கணக்குகள் ஊடாகச் சீராக்கப்படல் வேண்டும்.
- 2009 ஒக்ரோபர் 01 இல் வியாபாரக் கடன்பட்டோரிடமிருந்து ஐயக்கடன்களுக்காக ரூ. 15 000 ஏற்பாடு செய்யப்படல் வேண்டும். இத்தொகை விமல் வியாபாரத்தில் சேருவதற்கு முன்புள்ள காலத்திற்கான செலவொன்றாக இனங்காணப்படல் வேண்டும்.

(ii) மேலே ஏற்றுக்கொண்டதன் பிரகாரம் 2009 ஒக்ரோபர் 01 இல் விமல் காசை கொண்டு வந்ததுடன் கடனையும் கொடுத்துத் தீர்த்தார். எனினும் விமலினால் கொண்டுவரப்பட்ட காசு மாத்திரமே இவரின் மூலதனமாகக் கணக்கிடப்பட்டிருந்தது. சுரேஷின் கடனைத் தீர்ப்பது தொடர்பாக எதுவித கணக்கீட்டுப் பதிவுகளும் மேற்கொள்ளப் பட்டிருக்கவில்லை. இதன் விளைவாக முழுக் கடனுக்கும் பொருத்தமானதாக வருடாந்தம் 20 % இல் வட்டி கணிக்கப்பட்டு அவை கணக்கிலிடப்பட்டன.

(iii) சுரேஷ் இற்குச் சொந்தமான கட்டடத்தை பங்குடைமை மாதாந்தம் ரூ. 7 500 வாடகை செலுத்திப் பங்குடைமை வியாபாரத்தை நடத்துவதற்காகப் பயன்படுத்தியது.

(iv) 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக்கூற்றுக்கள் விமல் வியாபாரத்தில் சேர்ந்தபோது ஏற்றுக் கொள்ளப்பட்ட நிபந்தனைகளை கருத்தில் கொள்ளாமல் தயாரிக்கப்பட்டிருந்தது. வருடத்திற்கான இலாபம் **அருண், சுரேஷ்** ஆகியோர்களுக்கிடையிலிருந்த முன்னிருந்த உடன்பாட்டினடிப்படையில் இவ்விருவருக்கு மிடையில் **மாத்திரம்** பகிர்வு செய்யப்பட்டிருந்தது.

[பக். 10 ஐப் பார்க்க

(v) **2010 மார்ச் 31 இல் உள்ளபடியான ஐந்தொகை**

| **சொத்துகள்** | | **ரூ.'000** |
|---|---|---|
| பொறியும் உபகரணமும் | | 1 340 |
| முதலீடு | | 400 |
| நடைமுறைச் சொத்துகள் | | 760 |
| **மொத்தச் சொத்துகள்** | | **2 500** |
| மூலதனக் கணக்குகள் : | அருண் | 800 |
| | சுரேஷ் | 600 |
| | விமல் | 200 |
| நடைமுறைக் கணக்குகள் : | அருண் | 30 |
| | சுரேஷ் | 160 |
| | விமல் (வரவு) | (20) |
| கடன் (சுரேஷ்) | | 500 |
| நடைமுறைப் பொறுப்புகள் | | 230 |
| **உரிமையாண்மையும் மொத்தப் பொறுப்புக்களும்** | | **2 500** |

(vi) 2009 ஏப்பிரல் 01 இல் சுரேஷிடமிருந்து வருடாந்தம் 20 % வட்டிக்குக் கடன் பெறப்பட்டது.

(vii) ஐந்தொகையில் காட்டப்பட்டுள்ள நடைமுறைச் சொத்துகளில் உள்ளடக்கியுள்ள ரூ.5 000 கிரயமுள்ள சரக்கிருப்புகள் 2010 மார்ச் 30 இல் சேதமாக்கப்பட்டிருந்தன.

(viii) **பங்காளர்களின் நடைமுறைக் கணக்குகள்**

| | அருண் ரூ. | சுரேஷ் ரூ. | விமல் ரூ. | | அருண் ரூ. | சுரேஷ் ரூ. | விமல் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| மீதி கீ/வ 2009.04.01 | 20 000 | 10 000 | | காசு 2009/04/01 | | 10 000 | |
| பற்றுக்கள் | 250 000 | 200 000 | 20 000 | சம்பளங்கள் | 60 000 | | |
| பற்று வட்டி | 5 000 | | | மூலதன வட்டி | 80 000 | 60 000 | |
| | | | | இலாபப் பங்கு | 165 000 | 110 000 | |
| | | | | கடன் வட்டி | | 100 000 | |
| | | | | வாடகை | | 90 000 | |
| மீதி கீ/செ 2010.03.31 | 30 000 | 160 000 | | மீதி கீ/செ 2010.03.31 | | | 20 000 |
| | 305 000 | 370 000 | 20 000 | | 305 000 | 370 000 | 20 000 |
| மீதி கீ/வ 2010.04.01 | | | 20 000 | மீதி கீ/வ 2010.04.01 | 30 000 | 160 000 | |

(ix) நடைமுறைக் கணக்கில் காட்டப்பட்டுள்ள பற்று வட்டி வருடத்தின் முதல் ஆறு மாதங்களுக்கு உரியதாகும்.

(x) ஒவ்வொரு காலப் பகுதிக்கும் குறிப்பாக அடையாளப்படுத்தக்கூடிய வருமானம் செலவினைத் தவிர மற்றைய வருமானங்கள், செலவுகள் வருடம் முழுவதும் ஒரு சீரான முறையில் எழுகின்றது எனக் கருதுக.

**வேண்டப்படுவது:**

(1) அருண், சுரேஷ் ஆகியோர்களுக்கிடையில் காணப்பட்ட பங்குடைமை உடன்படிக்கையில் உள்ளடக்கப்பட்டிருந்த நான்கு உடன்படிக்கை விதிகள்

(2) நன்மதிப்பை சீராக்குவதற்கும் சொத்துகளின் முன் கொண்டுவரும் தொகையில் எழுந்த மாற்றங்களைப் பதிவிடுவதற்கும் தேவையான நாட்குறிப்புப் பதிவுகள்

(3) தனித்தனியாகக் காட்டும் வகையில் 2009 செப்ரெம்பர் 30 இல் முடிவடைந்த ஆறு மாதங்களுக்கானதும் 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த ஆறு மாதங்களுக்குமான பங்குடைமையின் இலாப நட்டம்

(4) 2009 செப்ரெம்பர் 30 இல் முடிவடைந்த ஆறு மாத காலத்திற்கானதும் 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த ஆறு மாத காலத்திற்கானதுமான இலாப/நட்டத்தை பங்காளர்கள் எவ்வாறு பகிர்வர் என்பதைத் தனித்தனியாகக் காட்டும் கூற்று

(5) தேவையான சீராக்கங்களை மேற்கொண்டதன் பின்னரான 2010 மார்ச் 31 இல் உள்ளபடியான அருண், சுரேஷ், விமல் ஆகியோரது பங்குடைமையின் ஐந்தொகை

*(20 புள்ளிகள்)*

[பக். 11 ஐப் பார்க்க

2. சூரியா கம்பனி 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான இலாபமாக ரூ. 750 000 ஐக் கொண்டிருந்தது. அதனைத் தொடர்ந்து பின்வரும் வழுக்கள் வெளிப்படுத்தப்பட்டன.

(i) 2009 மார்ச் 31 இல் இருந்த சரக்கிருப்புகள் ரூ. 50 000 இனால் அதிகமாகக் காட்டப்பட்டிருந்தன.

(ii) கொள்வனவுத் திரும்பல் ரூ. 30 000 கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் செலவில் பதியப்பட்டதுடன் கொள்வனவுத் திரும்பல் கணக்கில் ரூ. 3 000 மட்டுமே செலவில் பதியப்பட்டது.

(iii) கொடுத்த கழிவு ரூ. 6 000 ஆனது பெற்ற கழிவுக் கணக்கில் வரவில் பதியப்பட்டது.

(iv) பெறுமதி சேர்ப்பு வரி (VAT) ரூ. 1 200 ஐயும் உள்ளடக்கிய காசு விற்பனைத் தொகையான ரூ. 11 200 ஆனது விற்பனைக் கணக்கின் செலவில் பதியப்பட்டிருந்தது.

(v) வருடத்திற்கான வட்டிச் செலவினமானது ரூ. 5 000 இனால் குறைத்து எழுதப்பட்டிருந்தது.

(vi) 2010 மார்ச் 31 இலுள்ள இருப்புகளின் தேறிய தேறத்தக்க பெறுமதியானது அதன் கிரயத்தை விட ரூ. 25 000 இனால் குறைவாக இருந்தது. எனினும் இவ்வருடத்திற்கான இலாபத்தினை கணிக்கையில் இறுதி சரக்கிருப்பானது கிரயத்தில் பெறுமதியிடப்பட்டுள்ளது.

**வேண்டப்படுவது:**

(1) வழுக்களைத் திருத்துவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள்

(2) வழுக்களைத் திருத்திய பின்னரான வருடத்திற்கான இலாபம்

(3) வழுக்களைத் திருத்திய பின்னர் தேறிய சொத்துகளில் எழுந்த அதிகரிப்பு அல்லது குறைவு

*(10 புள்ளிகள்)*

3. 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்களும் நிகழ்வுகளும் கம்பனியொன்றுடன் தொடர்பானவை

| திகதி | கொடுக்கல் வாங்கல்களும் நிகழ்வுகளும் |
|---|---|
| 2009.04.01 | இத்தினத்தில் ரூ. 120 000 செலவில் ரூ. 360 000 ஐ கிரயமாகவும் ரூ. 160 000 ஐத் திரண்ட பெறுமானத் தேய்வாகவும் கொண்ட கட்டடமொன்றின் கட்டமைப்பு மாற்றியமைக்கப்பட்டது. இது இக்கட்டடத்தின் பயன்தரு ஆயுட் காலத்தை 30 வருடத்திலிருந்து 36 வருடத்திற்கு உயர்த்தியுள்ளது. எனினும் இதன் எஞ்சிய பெறுமதியான ரூ. 60 000 ஆனது கட்டமைப்பு மாற்றத்திற்குப் பின்பும் அதே அளவாகவே காணப்படும். |
| 2009.07.01 | ரூ. 900 000 கிரயம் கொண்ட நிலத்துண்டொன்று உயர் தொழினுட்பம் கொண்ட இயந்திரத்தைப் பெறும் பொருட்டு பரிமாற்றம் செய்யப்பட்டது. இத்தினத்தில் நிலத்தினதும் இயந்திரத்தினதும் நியாயமான பெறுமதி ஒவ்வொன்றும் ரூ. 1 000 000 ஆகும். இயந்திரத்திற்கு கிரயத்தில் 20% வருடாந்தம் பெறுமானத் தேய்விடப்படுகிறது. |
| 2009.10.01 | 2009 மார்ச் 31 இல் ரூ. 1 000 000 கிரயத்தையும் ரூ. 300 000 ஐ திரண்ட பெறுமானத் தேய்வையும் கொண்ட உபகரணமொன்று ரூ. 600 000 இற்கு மீள் மதிப்பு செய்யப்பட்டது. உபகரணத்திற்கு நேர்கோட்டு முறையில் வருடாந்தம் 25 % பெறுமானத் தேய்விடப்படுகிறது. |
| 2010.01.01 | ரூ. 300 000 இற்கு வாங்கப்பட்ட இயந்திரமொன்று ரூ. 25 000 இற்கு விற்கப்பட்டது. 2009 மார்ச் 31 இல் இவ்வியந்திரத்தின் திரண்ட பெறுமானத்தேய்வு ரூ. 300 000 ஆகும். |

**வேண்டப்படுவது:**

(1) மேற்கூறப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் தொடர்பில் 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த வருடத்திற்கான மொத்தப் பெறுமானத் தேய்வு

(2) மேற்படி கொடுக்கல் வாங்கல் காரணமாக வருட இலாபத்தில் எழுந்த அதிகரிப்பு அல்லது குறைவுத் தொகை

(3) 2009.10.01 இலும் 2010.01.01 இலும் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் காரணமாக 2010 மார்ச் 31 இல் உள்ள உபகரணத்தினதும் இயந்திரத்தினதும் முன்கொண்டு வரும் தொகையில் எழுந்த அதிகரிப்பு அல்லது குறைவு

(4) மேற்படி கொடுக்கல் வாங்கல்கள் காரணமாக வருடத்திற்கான காசில் எழுந்த அதிகரிப்பு அல்லது குறைவுத் தொகை

*(10 புள்ளிகள்)*

[பக். 12 ஐப் பார்க்க

4. 2010 மார்ச் 31 இல் நலன்புரிச் சங்கமொன்றின் பரீட்சை மீதி கீழே தரப்பட்டுள்ளது.

| கணக்கு | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| காசு | 50 | |
| காசு முற்பணம் | 100 | |
| வருடாந்தம் 10% இல் நிலையான வைப்பு | 60 | |
| பெறப்பட்ட வட்டி | | 6 |
| எழுதுபொருட்கள் இருப்பு - 2009. 04. 01 இல் | 2 | |
| எழுதுபொருட்கள் கொள்வனவு | 21 | |
| உபகரணம் | 80 | |
| உபகரணத்திற்கான பெறுமானத்தேய்வு ஏற்பாடு 2010. 03. 31 இல் | | 48 |
| உபகரணப் பெறுமானத்தேய்வு | 8 | |
| நிர்வாகச் செலவுகள் | 50 | |
| அலுவலக வாடகை | 30 | |
| நலன்புரிச் செலவுகள் | 174 | |
| சந்தா நிலுவை 2009. 04. 01 இல் | 25 | |
| முற்பணமாகப் பெறப்பட்ட சந்தா 2009. 04. 01 இல் | | 15 |
| பெறப்பட்ட சந்தா | | 272 |
| திரண்ட நிதி 2009. 04. 01 இல் | | 259 |
| | 600 | 600 |

**மேலதிக தகவல்கள் :**

(i) 2010 மார்ச் 31 இல் எழுதுபொருட்கள் இருப்புகள் ரூ. 3 000 ஆகும்.

(ii) 2010 மார்ச் 31இல் சந்தா நிலுவை, சந்தா முற்பணம் முறையே ரூ. 40 000 உம், ரூ. 10 000 உம் ஆகும்.

(iii) 2009.04. 01 இல் காணப்பட்ட சந்தா நிலுவையில் உள்ளடக்கப்பட்டிருந்த ரூ. 10 000 பெறமுடியாது எனத் தெரிய வந்துள்ளது.

(iv) சங்கத்தின் கையில் இருந்த காசு ரூ. 5 000 இனால் குறைவாகக் காணப்பட்டது. இவ்வேறுபாட்டை பதிவழிப்பது எனத் தீர்மானிக்கப்பட்டது.

(v) பரீட்சை மீதியில் காட்டப்பட்டுள்ள காசு முற்பணமானது 2010 ஜனவரி 01 இல் புத்தகசாலை ஒன்றை நடாத்துவதற்காக நலன்புரிச் சங்கத்தினால் நியமிக்கப்பட்ட குழுவினருக்கு வழங்கப்பட்ட பணத்தினை பிரதிநிதித்துவப்படுத்துகிறது. இக்குழுவின் தலைவரினால் பின்வரும் தகவல்கள் வழங்கப்பட்டன.

※ காசுப் புத்தகச் சுருக்கம்:

| | ரூ.'000 | ரூ.'000 |
|---|---|---|
| காசு முற்பணம் | | 100 |
| புத்தகங்கள், சஞ்சிகைகள் விற்பனை | | 300 |
| | | 400 |
| கழிக்குக : | | |
| புத்தக, சஞ்சிகைகள் வழங்குனர்களுக்கான கொடுப்பனவு | 280 | |
| தளவாடம் வாங்கியது | 40 | |
| விற்பனை ஊழியர்களின் சம்பளம் | 15 | |
| போக்குவரத்து | 5 | 340 |
| 2010.03. 31 இல் காசு மீதி | | 60 |

※ 2010 மார்ச் 31 இல் புத்தகங்களினதும் சஞ்சிகைகளினதும் இருப்பு ரூ. 120 000.

※ அங்கத்தவர்களினால் அன்பளிப்புச் செய்யப்பட்ட ரூ. 75 000 பெறுமதியான புத்தங்களில் ரூ. 50 000 பெறுமதியான புத்தகங்கள் 2010 மார்ச் 31 இல் விற்பனை செய்யப்படாமல் இருந்தன. இத்தொகை 2010 மார்ச் 31 இல் உள்ளபடியான இருப்பில் உள்ளடக்கப்படவில்லை,

※ தளவாடங்களுக்கான மூன்று மாத பெறுமானத்தேய்வு ரூ. 5 000

※ அலுவலக வாடகையில் 1/3 பங்கு புத்தகசாலைக்கு விதிக்கப்படல் வேண்டும்.

※ 2010 மார்ச் 31 இல் புத்தக, சஞ்சிகை வழங்குனர்களுக்கு செலுத்த வேண்டிய தொகை ரூ. 40 000 ஆகும்.

**வேண்டப்படுவது:**

(1) சந்தாக் கணக்கு

(2) 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த மூன்று மாதங்களிற்கான புத்தகசாலையின் இலாபம் அல்லது நட்டத்தின் கணிப்பீட்டினைக் காட்டும் கூற்று

(3) 2010 மார்ச் 31 இல் முடிவடைந்த ஆண்டிற்கான நலன்புரிச் சங்கத்தின் வருமானக் கூற்று

(4) 2010 மார்ச் 31 இல் உள்ளபடியான ஐந்தொகை

*(10 புள்ளிகள்)*

[பக். 13 ஐப் பார்க்க

5. 2010 மார்ச் 31 இல் அருந்ததி வியாபார நிலையத்தின் ஐந்தொகை கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூ.'000 |
|---|---|
| இயந்திரம் | 580 |
| இருப்புகள் - மூலப்பொருட்கள் | 45 |
| - நடைமுறை வேலை | 25 |
| - முடிவுப் பொருட்கள் | 10 |
| கடன்பட்டோர் | 75 |
| காசு | 15 |
| | 750 |
| உரிமையாண்மை | 700 |
| கடன்கொடுத்தோர் | 30 |
| செலுத்த வேண்டிய நேர்க்கூலி | 20 |
| | 750 |

**2010 யூன் 30 இல் முடிவடைந்த காலாண்டுக்கான மேலதிக தகவல்கள் பின்வருமாறு :**

(i) **நாளேட்டின் மொத்தம்** (ரூ. '000)

| | |
|---|---|
| விற்பனை நாளேடு | 1 000 |
| மூலப்பொருள் கொள்வனவு நாளேடு | 600 |
| கொள்வனவுத் திரும்பல் நாளேடு | 10 |

(ii) காசுப் பெறுவனவு, கொடுப்பனவுச் சுருக்கம் :

| **காசுப் பெறுவனவு** | (ரூ. '000) | **காசுக் கொடுப்பனவு** | (ரூ. '000) |
|---|---|---|---|
| காசு விற்பனைகள் | 120 | நேர்க்கூலிகள் | 150 |
| கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு | 950 | உற்பத்தி மேந்தலைகள் | 105 |
| | 1 070 | விற்பனை, நிர்வாகச் செலவுகள் | 140 |
| | | கடன்கொடுத்தோருக்கான கொடுப்பனவு | 610 |
| | | புத்தாண்டு முற்பணம் | 25 |
| | | | 1 030 |

(iii) பதியப்பட்ட நாட்குறிப்புப் பதிவுகள்

| கணக்கு | வரவு (ரூ. '000) | செலவு (ரூ. '000) |
|---|---|---|
| பெறுமானத்தேய்வு | 20 | |
| பெறுமானத்தேய்வு ஏற்பாடு | | 20 |
| (இயந்திரத்திற்குப் பெறுமானத் தேய்விடப்பட்டது) | | |
| நேர்க்கூலிகள் | 30 | |
| செலுத்த வேண்டிய நேர்க்கூலி | | 30 |
| (நேர்க்கூலி நிலுவை) | | |

(iv) 2010 யூன் 30 இல் சரக்கிருப்புகள் (ரூ.'000)

| | |
|---|---|
| மூலப்பொருட்கள் | 20 |
| நடைமுறை வேலைகள் | 35 |
| முடிவுப் பொருட்கள் | 30 |

(v) 2010 மார்ச் 31 இல் இயந்திரத்தின் கிரயம் ரூ. 800 000 ஆகும்.

**வேண்டப்படுவது**

(1) நாளேடுகளின் மொத்தங்களைப் பேரேட்டிற்கு மாற்றுவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள்

(2) 2010 யூன் 30 இல் உள்ளவாறான பரீட்சை மீதி

(3) 2010 யூன் 30 இல் முடிவடைந்த காலாண்டுக்கான உற்பத்திக் கணக்கு

(4) 2010 யூன் 30 இல் முடிவடைந்த காலாண்டுக்கான வருமானக்கூற்று

*(10 புள்ளிகள்)*

[பக். 14 ஐப் பார்க்க

5. 2010 மார்ச் 31 இல் அருந்ததி வியாபார நிலையத்தின் ஐந்தொகை கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூ.'000 |
|---|---|
| இயந்திரம் | 580 |
| இருப்புகள் - மூலப்பொருட்கள் | 45 |
| - நடைமுறை வேலை | 25 |
| - முடிவுப் பொருட்கள் | 10 |
| கடன்பட்டோர் | 75 |
| காசு | 15 |
| | 750 |
| உரிமையாண்மை | 700 |
| கடன்கொடுத்தோர் | 30 |
| செலுத்த வேண்டிய நேர்க்கூலி | 20 |
| | 750 |

**2010 யூன் 30 இல் முடிவடைந்த காலாண்டுக்கான மேலதிக தகவல்கள் பின்வருமாறு :**

(i) **நாளேட்டின் மொத்தம்** **(ரூ. '000)**

| | |
|---|---|
| விற்பனை நாளேடு | 1 000 |
| மூலப்பொருள் கொள்வனவு நாளேடு | 600 |
| கொள்வனவுத் திரும்பல் நாளேடு | 10 |

(ii) காசுப் பெறுவனவு, கொடுப்பனவுச் சுருக்கம் :

| **காசுப் பெறுவனவு** | **(ரூ. '000)** | **காசுக் கொடுப்பனவு** | **(ரூ. '000)** |
|---|---|---|---|
| காசு விற்பனைகள் | 120 | நேர்க்கூலிகள் | 150 |
| கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு | 950 | உற்பத்தி மேந்தலைகள் | 105 |
| | 1 070 | விற்பனை, நிர்வாகச் செலவுகள் | 140 |
| | | கடன்கொடுத்தோருக்கான கொடுப்பனவு | 610 |
| | | புத்தாண்டு முற்பணம் | 25 |
| | | | 1 030 |

(iii) பதியப்பட்ட நாட்குறிப்புப் பதிவுகள்

| கணக்கு | வரவு (ரூ. '000) | செலவு (ரூ. '000) |
|---|---|---|
| பெறுமானத்தேய்வு | 20 | |
| பெறுமானத்தேய்வு ஏற்பாடு (இயந்திரத்திற்குப் பெறுமானத் தேய்விடப்பட்டது) | | 20 |
| நேர்க்கூலிகள் | 30 | |
| செலுத்த வேண்டிய நேர்க்கூலி (நேர்க்கூலி நிலுவை) | | 30 |

(iv) 2010 யூன் 30 இல் சரக்கிருப்புகள் (ரூ.'000)

| | |
|---|---|
| மூலப்பொருட்கள் | 20 |
| நடைமுறை வேலைகள் | 35 |
| முடிவுப் பொருட்கள் | 30 |

(v) 2010 மார்ச் 31 இல் இயந்திரத்தின் கிரயம் ரூ. 800 000 ஆகும்.

**வேண்டப்படுவது**

(1) நாளேடுகளின் மொத்தங்களைப் பேரேட்டிற்கு மாற்றுவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள்

(2) 2010 யூன் 30 இல் உள்ளவாறான பரீட்சை மீதி

(3) 2010 யூன் 30 இல் முடிவடைந்த காலாண்டுக்கான உற்பத்திக் கணக்கு

(4) 2010 யூன் 30 இல் முடிவடைந்த காலாண்டுக்கான வருமானக்கூற்று

*(10 புள்ளிகள்)*

[பக். 14 ஐப் பார்க்க

6. (அ) 2010 மார்ச் மாதம் தொடர்பாக நிறுவனமொன்றின் கடன்பட்டோர் பேரேட்டிலிருந்து பின்வரும் தகவல்கள் எடுக்கப்பட்டன.

| கடன்பட்டோர் பெயர் | 2010.03.01 இல் மீதி ரூ. | விற்பனைகள் ரூ. | பெறப்பட்ட காசு ரூ. | விற்பனைத் திரும்பல் ரூ. | பதிவழிக்கப்பட்ட அறவிடமுடியாக் கடன்கள் ரூ. | 2010.03.31 இல் மீதி ரூ. |
|---|---|---|---|---|---|---|
| அமலன் | 10 000 | ? | 45 000 | 5 000 | - | 10 000 |
| ஜயசீலன் | 25 000 | 45 000 | 50 000 | ? | - | 15 000 |
| சங்கீதா | 15 000 | 40 000 | 35 000 | - | - | ? |
| சரிதா | 20 000 | 50 000 | 60 000 | - | ? | 5 000 |

**மேலதிக தகவல்கள்:**

(i) முன்னைய மாதத்தில் அறவிடமுடியாக் கடனாகப் பதிவழிக்கப்பட்ட கடன்பட்டோர் மீதியான ரூ. 8 000 ஆனது மார்ச் மாதத்தில் அவரினால் செலுத்தப்பட்டிருந்தது.

(ii) ஐயக் கடன்களுக்காக மாத முடிவிலுள்ள கடன்பட்டோர் தொகையில் 5% ஐ ஏற்பாடு செய்வது இந்நிறுவனத்தின் கொள்கையாகும்.

**வேண்டப்படுவது:**

(1) மேலேயுள்ள கடன்பட்டோரின் அட்டவணையில் '?' குறியீடு மூலம் குறிப்பிடப்பட்டுள்ள தவறவிட்ட பெறுமதிகள்

(2) காசு அடிப்படையிலும் நிலுவை அடிப்படையிலும் தனித்தனியாகக் கணிக்கப்பட்ட மார்ச் மாதத்திற்கான விற்பனை வருமானம்

(3) அறவிடமுடியாக் கடனிற்கும் ஐயக்கடனிற்குமான ஏற்பாட்டுக் கணக்கு

(4) மாத இறுதியில் காணப்படும் கடன்பட்டோரில் தேறிய அதிகரிப்பு அல்லது குறைவு

(05 புள்ளிகள்)

(ஆ) 2010 மார்ச் 31 இல் நிறுவனத்தின் வங்கிக் கூற்று செலவு மீதி ரூ. 3,000 ஐ காட்டியது. காசுப் புத்தக மீதியை வங்கிக் கூற்று மீதியுடன் ஒப்பிட்டபோது பின்வரும் தகவல்கள் தெரியவந்தன.

(i) வைப்புச் செய்யப்பட்ட காசோலைகள் ரூ. 80 000 இன்னும் வசூலிக்கப்படவில்லை.

(ii) வழங்குனரொருவருக்கு வழங்கப்பட்ட ரூ. 30 000 இற்கான காசோலையொன்று வங்கியில் சமர்ப்பிக்கப்படவில்லை.

(iii) வங்கிக் கூற்றின்படி வங்கிக் கட்டணங்கள் ரூ. 500, வாடகைக்கான நிலையான கட்டளைக் கொடுப்பனவு ரூ. 1 500 ஆகியன காசுப் புத்தகத்தில் பதியப்பட்டிருக்கவில்லை.

(iv) வங்கியினால் திருப்பியனுப்பிய ரூ. 20 000 பெறுமதியான காசோலை தொடர்பில் காசுப் புத்தகத்தில் எதுவித பதிவும் செய்யப்பட்டிருக்கவில்லை. இக்காசோலையானது கடன்பட்டோன் ஒருவனிடமிருந்து பெறப்பட்டு வங்கியில் வைப்புச் செய்யப்பட்டிருந்தது.

**வேண்டப்படுவது :**

(1) 2010 மார்ச் மாதத்திற்கான வங்கிக் கணக்கிணக்கக் கூற்று

(2) தேவையான சீராக்கங்களைச் செய்ய முன்னரான 2010 மார்ச் 31 இல் உள்ள காசுப் புத்தக மீதி

(3) மறுக்கப்பட்ட காசோலையைப் பதிவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள்

(05 புள்ளிகள்)
(மொத்தம் 10 புள்ளிகள்)

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

| 33 | T | II |
|---|---|---|

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2010 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2010 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2010

ගිණුම්කරණය II
கணக்கீடு II
**Accounting II**

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

சுட்டெண் : ..............................................

பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்

| பகுதி I இற்காக | |
|---|---|
| வினா இல. | புள்ளிகள் |
| 01 - 20 | |
| 21 - 40 | |
| மொத்தம் | |

*பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல்கள் :*

- ※ பகுதி I இலுள்ள **எல்லா வினாக்களுக்கும் இவ்வினாத் தாளிலேயே** விடைகள் எழுதுக. ஒவ்வொரு வினாவுக்கும் 1 புள்ளி வழங்கப்படும்.
- ※ பகுதி I இன் விடைத்தாளை பகுதி II இன் **விடைத்தாளுடன் இணைத்துக்** கையளிக்க.

## பகுதி I

● **01** தொடக்கம் **20** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிக்கும்போது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவு செய்து அதற்கு முன்னுள்ள கூட்டில் '✓' என அடையாளமிடுக. உ- ம்: ✓

1. பின்வரும் தகவல்கள் ஒரு தனிப் பொருளுடன் தொடர்புபட்டவையாயின் இதன் மொத்தப் பங்களிப்பு என்ன ?

| | |
|---|---|
| நிலையான மேந்தலைகள் | ரூ. 400 000 |
| பாதுகாப்பு எல்லை | ரூ. 200 000 |
| விற்பனைக்கான பங்களிப்பு (C/S) விகிதம் | 40% |

(1) ரூ. 200 000
(2) ரூ. 240 000
(3) ரூ. 400 000
(4) ரூ. 480 000
(5) ரூ. 600 000

2. 'கிரயம் – தொகை – இலாபம்' (CVP) பகுப்பாய்வு தொடர்பில் பின்வரும் கூற்றுக்களில் எது சரியானது ?

(1) இலாபத்தினை உழைப்பதற்குப் பாதுகாப்பு எல்லையை பேணுதல் அவசியமாகும்.
(2) சமப்பாட்டு புள்ளியில் (BEP) நிலையான கிரயமானது மொத்தப் பங்களிப்பினைவிட குறைவானது.
(3) பாதுகாப்பு எல்லை என்பது குறிப்பிட்ட செயற்பாட்டுத் தொகைக்கான இலாபத் தொகையைக் குறிக்கும்.
(4) செயற்பாட்டுத் தொகை மாறும்போது அலகிற்கான மாறும் கிரயம் மாறும்.
(5) விற்பனைக்கான பங்களிப்பு (C/S) விகிதமானது மாறும் கிரயத் தொகையினை விற்பனை விலையின் விகிதாசாரத்தில் குறிக்கிறது.

3. ஒரு நிறுவனத்தின் நடைமுறைச் சொத்து விகிதமானது அதன் விரைவு விகிதத்தின் இருமடங்காக இருக்கும்போது பின்வரும் கூற்றுகளில் எது சரியானது?

(1) நடைமுறைச் சொத்தானது நடைமுறைப் பொறுப்புகளின் அரைவாசிக்குச் சமன்.
(2) சரக்கிருப்பு நீங்கலான நடைமுறைச் சொத்துகள் சரக்கிருப்பின் இரண்டு மடங்காகும்.
(3) சரக்கிருப்பானது நடைமுறைச் சொத்துக்களின் அரைவாசிக்குச் சமன்.
(4) நடைமுறைப் பொறுப்புகளானது நடைமுறைச் சொத்துகளின் இரண்டு மடங்காகும்.
(5) நடைமுறைச் சொத்துகளானது நடைமுறைப் பொறுப்புகளின் இரண்டு மடங்காகும்.

[பக். 2 ஐப் பார்க்க

4. பின்வரும் விகிதங்களில் எந்த இரு விகிதங்கள் வணிக நிறுவனமொன்றின் இணைவினை அளவிட மிகப் பொருத்தமானது?
A - நீண்டகாலக் கடன்/ உரிமையாண்மை B - மொத்தக் கடன்/ மொத்தச் சொத்துகள்
C - குறுங்காலக் கடன்/ மொத்தச் சொத்துகள் D - நடைமுறைச் சொத்துகள்/ நடைமுறைப் பொறுப்புகள்
(1) A, B ஆகியன
(2) A, C ஆகியன
(3) A, D ஆகியன
(4) B, C ஆகியன
(5) C, D ஆகியன

5. பின்வருவனவற்றுள் எது உற்பத்திக் கிரயம் **அல்லாதது** ?
(1) தொழிற்சாலை எரிபொருள் சக்தி
(2) தொழிற்சாலை ஊழியர்களுக்கான கூலிகள்
(3) உற்பத்தியில் பயன்படுத்திய மூலப்பொருள்
(4) புதிய பொருள் ஒன்றிற்கான விளம்பரப்படுத்தல்
(5) உற்பத்தியில் பயன்படுத்திய நேரில் மூலப்பொருட்கள்

6. கிரய அலகானது உற்பத்திப் பொருள் ஒன்றாக இருப்பின் பின்வருவனவற்றுள் எதை/ எவற்றை நேர் மூலப்பொருட்களாக வகைப்படுத்தலாம்?
A - இரும்புக்கட்டைகளை உற்பத்தி செய்வதற்கு பயன்படுத்திய உலோகம்
B - உற்பத்தியில் ஈடுபடுத்திய இயந்திரத்திற்குப் பயன்படுத்திய எண்ணெய்கள்
C - கணிப்பான்களை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்திய பிளாஸ்டிக்
(1) A மாத்திரம்.
(2) C மாத்திரம்.
(3) A, B ஆகியன மாத்திரம்.
(4) A, C ஆகியன மாத்திரம்.
(5) A, B, C ஆகிய எல்லாம்.

● பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி **7** ஆம் **8** ஆம் வினாக்களுக்கு விடை தருக.

நிறுவனமொன்றின் 31 மார்ச் 2010 இல் உள்ளவாறான ஐந்தொகையிலிருந்து தேர்ந்தெடுத்த உருப்படிகளும் அத்தினத்தில் முடிவடைந்த வருடத்திற்கான இலாபமும் கீழே தரப்பட்டுள்ளன.

| **விடயங்கள்** | ரூ. |
|---|---|
| மொத்தச் சொத்துகள் | 8 200 |
| மொத்தப் பொறுப்புகள் | 4 200 |
| கூறப்பட்ட மூலதனம் | 3 500 |
| வருடத்திற்கான இலாபம் | 1 000 |

7. 31 மார்ச் 2010 இல் உள்ளவாறான உரிமையாண்மையின் தொகை எது?
(1) ரூ. 1 000
(2) ரூ. 4 000
(3) ரூ. 4 200
(4) ரூ. 4 500
(5) ரூ. 8 200

8. 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த வருடத்திற்கான தேறிய சொத்துகள் மீதான மொத்த வருவாய் எது?
(1) ரூ. 1 000
(2) ரூ. 4 000
(3) ரூ. 4 200
(4) ரூ. 4 500
(5) ரூ. 8 200

[பக். 3 ஐப் பார்க்க

9. இலங்கைக் கணக்கீட்டு நியமம் 36 இற்கமைய ஏற்பாடு ஒன்றினை இனங்கண்டு கொள்வதற்குப் பின்வருவனவற்றுள் எவற்றைத் திருப்திப்படுத்தல் வேண்டும்?
   A - முன்னைய நிகழ்வொன்றின் விளைவாக நிறுவனமொன்று நிகழ்கால கடப்பாட்டினைக் கொண்டிருக்க வேண்டும்.
   B - பொருளாதார நன்மைகளின் சாத்தியமான வெளிப்பாய்ச்சல் இருத்தல் வேண்டும்.
   C - தொகையானது நம்பகமான முறையில் அளவிடக்கூடியதாக இருத்தல் வேண்டும்.

   (1) A மாத்திரம்.
   (2) A, B ஆகியன மாத்திரம்.
   (3) A, C ஆகியன மாத்திரம்.
   (4) B, C ஆகியன மாத்திரம்.
   (5) A, B, C ஆகிய எல்லாம்.

10. ஒரு சில்லறை வியாபாரமானது விற்பனையில் எப்போதும் 20 % மொத்தக் கிரயத்தைப் பெறுதினைக் கொள்கையாகக் கொண்டுள்ளது. இலங்கைக் கணக்கீட்டு நியமம் 5 இன் படி இந்நிறுவனத்தின் வருடமுடிவிலுள்ள சரக்கிருப்பின் பெறுமதியை மதிப்பிடப் பின்வரும் நுட்பங்களுள் எது மிகவும் பொருத்தமானதாகும் ?

   (1) குறிப்பிட்டு அடையாளங்காணும் கிரய முறை (Specific Identification)
   (2) சில்லறை முறை
   (3) முதல் உள்ளே முதல் வெளியே
   (4) நிறையளித்த சராசரி கிரய முறை
   (5) நியம கிரய முறை

11. கணக்கீட்டாண்டொன்றில் வியாபாரக் கடன்பட்டோர் மீதியானது ரூ. 40 000 ஆல் அதிகரித்தும் அதே ஆண்டில் கடன் விற்பனையானது ரூ. 200 000 ஆகவும் காணப்படும் எனத் தரப்படின் வியாபாரக் கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு எவ்வளவாகும் ?

   (1) ரூ. 40 000
   (2) ரூ. 120 000
   (3) ரூ. 160 000
   (4) ரூ. 200 000
   (5) ரூ. 240 000

12. பின்வரும் தகவல்களின் அடிப்படையில் கணக்கீட்டு வருடமொன்றில் ஒரு நிறுவனத்தின் செயற்பாட்டு நடவடிக்கைகளிலிருந்தான தேறிய காசுப் பாய்ச்சல்களில் ஏற்படும் அதிகரிப்பு அல்லது குறைவு எவ்வளவு ?

| | ரூ. |
|---|---|
| வருடத்திற்கான இலாபம் | 120 000 |
| பெறுமானத் தேய்வு | 20 000 |
| வியாபாரக் கடன்பட்டோரில் அதிகரிப்பு | 60 000 |
| கூலிக் கொடுப்பனவுகளில் குறைவு | 40 000 |
| முன் செலுத்திய செலவுகளில் குறைவு | 50 000 |

   (1) ரூ. 10 000 குறைவு
   (2) ரூ. 90 000 அதிகரிப்பு
   (3) ரூ. 140 000 அதிகரிப்பு
   (4) ரூ. 150 000 அதிகரிப்பு
   (5) ரூ. 190 000 அதிகரிப்பு

13. கிரயங்களை சேகரித்தல், ஒதுக்குதல், கட்டுப்படுத்தல் ஆகியன தொடர்பான கணக்கீட்டு தொழிற்பாடு பின்வருவனவற்றுள் எதனால் கண்டறியப்படும் ?

   (1) நிதிக்கணக்கீடு
   (2) கட்டுப்பாட்டுக் கணக்குகளின் பராமரிப்பு
   (3) கிரயக் கணக்கீடு
   (4) செயற்திட்ட மதிப்பீடு
   (5) காசுப்பாய்ச்சல் பகுப்பாய்வு

[பக். 4 ஐப் பார்க்க

9. இலங்கைக் கணக்கீட்டு நியமம் 36 இற்கமைய ஏற்பாடு ஒன்றினை இனங்கண்டு கொள்வதற்குப் பின்வருவனவற்றுள் எவற்றைத் திருப்திப்படுத்தல் வேண்டும்?
   A - முன்னைய நிகழ்வொன்றின் விளைவாக நிறுவனமொன்று நிகழ்கால கடப்பாட்டினைக் கொண்டிருக்க வேண்டும்.
   B - பொருளாதார நன்மைகளின் சாத்தியமான வெளிப்பாய்ச்சல் இருத்தல் வேண்டும்.
   C - தொகையானது நம்பகமான முறையில் அளவிடக்கூடியதாக இருத்தல் வேண்டும்.
   (1) A மாத்திரம்.
   (2) A, B ஆகியன மாத்திரம்.
   (3) A, C ஆகியன மாத்திரம்.
   (4) B, C ஆகியன மாத்திரம்.
   (5) A, B, C ஆகிய எல்லாம்.

10. ஒரு சில்லறை வியாபாரமானது விற்பனையில் எப்போதும் 20 % மொத்தக் கிரயத்தைப் பெறுதினைக் கொள்கையாகக் கொண்டுள்ளது. இலங்கைக் கணக்கீட்டு நியமம் 5 இன் படி இந்நிறுவனத்தின் வருடமுடிவிலுள்ள சரக்கிருப்பின் பெறுமதியை மதிப்பிடப் பின்வரும் நுட்பங்களுள் எது மிகவும் பொருத்தமானதாகும்?
   (1) குறிப்பிட்டு அடையாளங்காணும் கிரய முறை (Specific Identification)
   (2) சில்லறை முறை
   (3) முதல் உள்ளே முதல் வெளியே
   (4) நிறையளித்த சராசரி கிரய முறை
   (5) நியம கிரய முறை

11. கணக்கீட்டாண்டொன்றில் வியாபாரக் கடன்பட்டோர் மீதியானது ரூ. 40 000 ஆல் அதிகரித்தும் அதே ஆண்டில் கடன் விற்பனையானது ரூ. 200 000 ஆகவும் காணப்படும் எனத் தரப்படின் வியாபாரக் கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு எவ்வளவாகும்?
   (1) ரூ. 40 000
   (2) ரூ. 120 000
   (3) ரூ. 160 000
   (4) ரூ. 200 000
   (5) ரூ. 240 000

12. பின்வரும் தகவல்களின் அடிப்படையில் கணக்கீட்டு வருடமொன்றில் ஒரு நிறுவனத்தின் செயற்பாட்டு நடவடிக்கைகளிலிருந்தான தேறிய காசுப் பாய்ச்சல்களில் ஏற்படும் அதிகரிப்பு அல்லது குறைவு எவ்வளவு?

| | ரூ. |
|---|---|
| வருடத்திற்கான இலாபம் | 120 000 |
| பெறுமானத் தேய்வு | 20 000 |
| வியாபாரக் கடன்பட்டோரில் அதிகரிப்பு | 60 000 |
| கூலிக் கொடுப்பனவுகளில் குறைவு | 40 000 |
| முன் செலுத்திய செலவுகளில் குறைவு | 50 000 |

   (1) ரூ. 10 000 குறைவு
   (2) ரூ. 90 000 அதிகரிப்பு
   (3) ரூ. 140 000 அதிகரிப்பு
   (4) ரூ. 150 000 அதிகரிப்பு
   (5) ரூ. 190 000 அதிகரிப்பு

13. கிரயங்களை சேகரித்தல், ஒதுக்குதல், கட்டுப்படுத்தல் ஆகியன தொடர்பான கணக்கீட்டு தொழிற்பாடு பின்வருவனவற்றுள் எதனால் கண்டறியப்படும்?
   (1) நிதிக்கணக்கீடு
   (2) கட்டுப்பாட்டுக் கணக்குகளின் பராமரிப்பு
   (3) கிரயக் கணக்கீடு
   (4) செயற்திட்ட மதிப்பீடு
   (5) காசுப்பாய்ச்சல் பகுப்பாய்வு

[பக். 4 ஐப் பார்க்க

14. முகாமைக் கணக்கீடு தொடர்பில் பின்வரும் கூற்றுகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?
   A - இது நிறுவனமொன்றின் முகாமை தகவல் முறைமையின் ஒரு பகுதியாகும்.
   B - இது நிறுவனமொன்றின் செயற்பாடுகளைத் திட்டமிடவும் கட்டுப்படுத்தவும் முகாமையாளர்களால் பயன்படுத்தப்படுகிறது.
   C - இது முதலீட்டு தீர்மானங்களை மேற்கொள்ள வெளியாட்களுக்குத் தேவையான தகவல்களை வழங்குகிறது.
   (1) A மாத்திரம்.
   (2) B மாத்திரம்.
   (3) C மாத்திரம்.
   (4) A, B ஆகியன மாத்திரம்.
   (5) A, B, C ஆகிய எல்லாம்.

15. முடிவுப் பொருட்கள் இருப்பு கிரயத்தினைக் கணிப்பிடும்போது பின்வரும் விடயங்களுள் எவைகளை உள்ளடக்குதல் வேண்டும் ?
   A - கொள்வனவு செய்த பொருட்களிற்கான விலைப்பட்டியல் விலை
   B - களஞ்சிய மேற்பார்வையாளரின் சம்பளங்கள்
   C - கொள்வனவு செய்த பொருட்களை பரிசோதிப்பதற்கு ஏற்பட்ட கிரயங்கள்
   D - பொருட்களை விற்பனைக்கு தயாராக்குவதற்கு ஏற்பட்ட பொதி கட்டும் கிரயங்கள்
   (1) A, B ஆகியன மாத்திரம்.
   (2) A, C ஆகியன மாத்திரம்.
   (3) A, C, D ஆகியன மாத்திரம்.
   (4) A, B, D ஆகியன மாத்திரம்.
   (5) A, B, C ஆகியன மாத்திரம்.

16. கார் வியாபாரி ஒருவர் சரக்கிருப்பு கிரயத்தினை கணிப்பதற்கு 'குறிப்பிட்டு அடையாளம் காணும் கிரய முறை' யினைப் பின்பற்றுகிறார். அவர் குறித்த ஒரு மாதத்திற்கான பின்வரும் தகவல்களை தந்துள்ளார்.

| விவரம் | மாதிரி | கார்களின் எண்ணிக்கை | கார் ஒன்றின் கிரயம் ரூ. ('000) | கார் ஒன்றின் விற்பனை விலை ரூ. ('000) |
|---|---|---|---|---|
| ஆரம்ப இருப்பு | 001 | 1 | 800 | |
| | 002 | 3 | 1 000 | |
| கொள்வனவு | 004 | 4 | 1 200 | |
| விற்பனைகள் | 001 | 1 | | 1 050 |
| | 002 | 1 | | 1 250 |
| | 004 | 3 | | 1 500 |

   விற்பனை செய்யப்பட்ட கார்களின் கிரயம் யாது ?
   (1) ரூ. 3 200 000
   (2) ரூ. 4 800 000
   (3) ரூ. 5 400 000
   (4) ரூ. 6 000 000
   (5) ரூ. 6 800 000

17. வரையறுத்த களனிய பொதுக்கம்பனியின் முகாமையானது 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டிற்கான நிதிக்கூற்றுகளை 17 மே 2010 இல் தயாரித்துள்ளது. இயக்குனர் சபையானது அவைகளை 1 யுன் 2010 இல் மீளாய்வு செய்து 10 யுன் 2010 இல் நிதிக் கூற்றுக்களில் கையொப்பமிட்டுள்ளனர். இவைகள் 22 யுலை 2010 இல் பங்குதாரர்களிற்கு கிடைக்கக்கூடியதாக விடப்பட்டுள்ளதுடன் பங்குதாரர்கள் 25 யுலை 2010 இல் அவைகளுக்கு அங்கீகாரமளித்துள்ளனர்.
   இலங்கை கணக்கீட்டு நியமம் 12 இன் படி களனிய வரையறுத்த பொதுக்கம்பனியின் ஐந்தொகை தினத்திற்குப் (date) பின்னர் இடம்பெறும் நிகழ்வுகளை அடையாளம் காண்பதற்குப் பிரயோகிக்கக்கூடிய கால எல்லை எது ?
   (1) 31 மார்ச் தொடக்கம் 17 மே 2010 வரை
   (2) 31 மார்ச் தொடக்கம் 01 யுன் 2010 வரை
   (3) 31 மார்ச் தொடக்கம் 10 யுன் 2010 வரை
   (4) 31 மார்ச் தொடக்கம் 22 யுலை 2010 வரை
   (5) 31 மார்ச் தொடக்கம் 25 யுலை 2010 வரை

[பக். 5 ஐப் பார்க்க

18. இலங்கை கணக்கீட்டு நியமம் 10 இற்கமைய கணக்கீட்டு கொள்கைகளின் தெரிவு, அதன் பிரயோகம் தொடர்பில் பின்வரும் கூற்றுகளில் எது சரியானது ?
    A - நிறுவனமானது தெரிவு செய்யப்பட்ட கணக்கீட்டு கொள்கைகளைத் தொடர்ந்தும் பிரயோகிக்க வேண்டுமெனக் கேட்கப்பட்டுள்ளது.
    B - கொடுக்கல் வாங்கல் ஒன்றிற்குக் கணக்கீட்டு நியமம் இல்லாத நிலையில் நிறுவனத்தின் முகாமையானது கணக்கீட்டுக் கொள்கைகளைத் தெரிவு செய்வதில் தமது தீர்மானங்களை எடுக்கலாம்.
    C - நிறுவனத்தின் கணக்கீட்டு கொள்கைகளை வெளிப்படுத்தல் அத்தியாவசியமானது அல்ல.
    (1) A மாத்திரம்.
    (2) B மாத்திரம்.
    (3) C மாத்திரம்.
    (4) A, B ஆகியன மாத்திரம்.
    (5) B, C ஆகியன மாத்திரம்.

19. கணக்கீட்டு மதிப்பீடுகள் தொடர்பில் பின்வரும் கூற்றுகளில் எவை சரியானவை ?
    A - அவைகள் குறிப்பிட்ட எடுகோள்களின் அடிப்படையிலானவை.
    B - அவைகள் நிதிக் கூற்றுக்களின் பண்புசார் குணாதிசயங்களைக் குறைக்கின்றன.
    C - புதிய தகவல்கள் காரணமாக அவைகள் மாற்றமடைகின்றன.
    D - அவைகள் நிதிக் கூற்றுகளைத் தயாரிப்பதற்கும் சமர்ப்பிப்பதற்கும் தேவையானவை.
    (1) A, B ஆகியன மாத்திரம்.
    (2) B, C ஆகியன மாத்திரம்.
    (3) C, D ஆகியன மாத்திரம்.
    (4) A, B, C ஆகியன மாத்திரம்.
    (5) A, C, D ஆகியன மாத்திரம்.

20. உற்பத்தி மேந்தலைகள் நேர் ஊழிய மணித்தியால அடிப்படையில் உறிஞ்சப்பட்டிருப்பின் பின்வரும் தகவல்களின்படி எல்லா உற்பத்திப் பொருட்களாலும் உறிஞ்சப்படும் மொத்த மேந்தலை எது ?

| | மொத்த மேந்தலைகள் (ரூ.) | நேர் ஊழியம் (மணித்தியாலங்கள்) |
|---|---|---|
| மதிப்பிடப்பட்டது | 600 000 | 30 000 |
| உண்மையானது | 540 000 | 20 000 |

    (1) ரூ. 320 000
    (2) ரூ. 400 000
    (3) ரூ. 525 000
    (4) ரூ. 560 000
    (5) ரூ. 600 000

● **21** தொடக்கம் **35** வரையுள்ள வினாக்களுக்கு **சுருக்கமாக** விடையளிக்குக.

21. கம்பனியொன்றின் 31 மார்ச் 2009 இல் உள்ளபடியான கூறப்பட்ட மூலதனம் ரூ. 1 200 000 ஆகவும் பங்கொன்றிற்கான சராசரிப் பெறுமதி ரூ. 10 ஆகவும் இருந்தது. 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த வருடத்தில் கம்பனியானது ஒவ்வொரு மூன்று பங்குகளிற்கு ஒரு பங்கு என்ற அடிப்படையில் பங்கொன்று ரூ. 10 பிரதிபயனில் (கைமாறு) வழங்கி ஒதுக்கங்களை மூலதனமாக்கியுள்ளது. இதனைத் தொடர்ந்து உரிமை வழங்கலானது பங்கொன்று ரூ. 9 இல் ஒவ்வொரு இரண்டு பங்குகள் வைத்திருப்போருக்கு ஒரு பங்கு என்ற அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டது.

உபகாரப்பங்கு வழங்கல், உரிமை வழங்கல் ஆகியன செய்யப்பட்டதன் பின்னரான கம்பனியின் மூலதனத்தின் மீதி என்ன ? ..............................................................

22. 'திரும்பப் பெறும் காலம்' (PB) முறையுடன் ஒப்பிடுகையில் தேறிய நிகழ்காலப் பெறுமதி (NPV) முறையில் காணப்படும் **இரண்டு** அநுகூலங்களைத் தருக.

    1. ..............................................................

    2. ..............................................................

[பக். 6 ஐப் பார்க்க

23. நிறுவனமொன்றின் இரண்டு கணக்கீட்டு வருடத்திற்கான சில தகவல்கள் பின்வருமாறு தரப்படுகிறது.

| | 2010 (ரூ. '000) | 2009 (ரூ. '000) |
|---|---|---|
| மொத்தச் சொத்துகள் | 250 | 200 |
| கடன் விற்பனைகள் | 150 | 75 |
| காசு விற்பனைகள் | 250 | 325 |
| சராசரி கடன்பட்டோர் | 30 | 15 |

2009 வருடத்துடன் ஒப்பிடுகையில் 2010 ஆம் வருடத்தில் கடன் சேகரிப்புக் காலம், மொத்தச் சொத்துகள் புரள்வு விகிதம் என்பன அதிகரித்துள்ளதா ? அல்லது குறைவடைந்துள்ளதா ? அல்லது மாற்றம் எதுவும் இல்லையா ? என்பதைக் குறிப்பிடுக.

(அ) கடன் சேகரிப்புக் காலம் : ....................................................................

(ஆ) மொத்தச் சொத்துகள் புரள்வு விகிதம் : ....................................................................

24. கீழே தரப்பட்டுள்ள இரண்டு வரைபடங்களும் ஒரு கம்பனியின் சமமான ஆரம்ப முதலீடுகளைக் கொண்டுள்ள நான்கு செயற்றிட்டங்கள் தொடர்பானவை.




(அ) கம்பனியினால் முதலீட்டினை விரைவாக திரும்பப் பெற வேண்டுமாயின் எந்த செயற்றிட்டத்தினைத் தெரிவு செய்தல் வேண்டும் ?

....................................................................

(ஆ) செயற்றிட்டங்களின் காசுப்பாய்ச்சல்களின் நேரப் பெறுமதியைக் கருத்திற்கொள்வோமாயின் எந்த செயற்றிட்டம் நிதி ரீதியில் அதிக வாய்ப்பினைக் கொண்டுள்ளது ?

....................................................................

25. ஒரு பொருளின் சமப்பாட்டுப் புள்ளியானது ஏனைய காரணிகள் மாறாதுள்ள நிலையில் விற்பனை விலை மாறும்போது 2000 இலிருந்து 2500 அலகுகளாக மாற்றமடைந்துள்ளது. நிலையான கிரயம் ரூ. 100 000 ஆகும். அலகு விற்பனை விலையானது எவ்வளவு தொகையால் அதிகரித்துள்ளது அல்லது குறைவடைந்துள்ளது என்பதைக் குறிப்பிடுக.

....................................................................

26. பின்வருவன தொடர்பில் முகாமைக்கான கணக்கீட்டிற்கும் நிதிக் கணக்கீட்டிற்கும் இடையிலான வேறுபாட்டினைக் குறிப்பிடுக.

| | முகாமைக் கணக்கீடு | நிதிக் கணக்கீடு |
|---|---|---|
| தகவல்களைப் பயன்படுத்துவோர் | .................... | .................... |
| அறிக்கையிடல் தடவைகள் | .................... | .................... |

[பக். 7 ஐப் பார்க்க

27. நிறுவனமொன்று உற்பத்தியில் பயன்படுத்திய இயந்திரமொன்றினை ரூ. 750 000 இற்கு விற்பனை செய்தது. இது விற்கும் நேரத்தில் ரூ. 800 000 முன் கொண்டு வரும் தொகையைக் கொண்டிருந்தது. இவ்விற்பனை மூலம் பெறப்பட்ட காசானது புதிய இயந்திரமொன்றை ரூ. 1 600 000 இற்கு வாங்குவதற்குப் பயன்படுத்தப்பட்டது. மிகுதித் தொகையானது வங்கிக் கடன் மூலமாக தீர்க்கப்பட்டது.

மேலுள்ள நடவடிக்கையினால் எழுந்த பின்வருவனவைகளைக் கணிக்குக.

(அ) தேறிய காசுப்பாய்ச்சல் : ....................................................................

(ஆ) காசற்ற விடயம் : ....................................................................

28. உற்பத்திக் கிரயத்தைக் கணிப்பிடுவதற்கான நோக்கங்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

1. .................................................. 2. ..................................................

29. பொருளொன்றை உற்பத்தி செய்வது தொடர்பில் கம்பனி ஒன்றிற்கு பின்வரும் செலவுகள் ஏற்பட்டுள்ளன.

| | (ரூ.) |
|---|---|
| பயன்படுத்திய நேர் மூலப்பொருட்கள் | 150 000 |
| விற்பனைச் செலவுகள் | 5 000 |
| நேரில் உற்பத்திக் கூலிகள் | 7 000 |
| நிர்வாகச் செலவுகள் | 10 000 |
| தொழிற்சாலை உபகரணப் பெறுமானத் தேய்வு | 70 000 |
| நேர் ஊழியக் கிரயம் | 40 000 |
| தொழிற்சாலை ஊழியர்களுக்கான மேலதிக நேரக் கொடுப்பனவு | 20 000 |
| பயன்படுத்திய நேரில் மூலப் பொருட்கள் | 45 000 |

மொத்த உற்பத்திக் கிரயம் யாது ?

..............................................................................................................

30. (அ) களஞ்சிய பேரேட்டினைப் பராமரிப்பதற்கான நோக்கத்தினைக் குறிப்பிடுக.

..............................................................................................................

(ஆ) களஞ்சிய பேரேட்டினை நிகழ்நிலைப்படுத்துவதற்குப் (updating) பயன்படுத்தும் **இரண்டு** மூல ஆவணங்களைப் பெயரிடுக.

1. .................................................. 2. ..................................................

31. சிக்கனக் கட்டளைத் தொகை (EOQ) இனைத் தீர்மானிக்கும் **இரண்டு** வகையான கிரயங்களைக் குறிப்பிடுக.

1. ..............................................................................................................

2. ..............................................................................................................

32. பல்வேறு பாண் உற்பத்திப் பொருட்களைத் தயாரிக்கும் நிறுவனமொன்றிற்கான பின்வரும் ஒவ்வொரு கிரய மூலங்களிற்கும் **ஒவ்வொரு** உதாரணம் தருக (பாண் உற்பத்திப் பொருட்களைக் கிரய அலகுகளாகக் கருதுக).

நேர் மூலப்பொருட்கள் ....................................

நேரில் ஊழியம் ....................................

நேரில் செலவுகள் ....................................

நேரில் மூலப்பொருட்கள் ....................................

33. கீழே தரப்பட்டுள்ள அட்டவணையில் தரப்பட்டுள்ள ஒவ்வொரு கிரய வகைப்படுத்தலிற்கான நோக்கத்தைக் குறிப்பிடுக.

| கிரய வகைகள் | கிரய வகைப்படுத்தலுக்கான நோக்கம் |
|---|---|
| 1. உற்பத்திக் கிரயமும் உற்பத்தியல்லாக் கிரயமும் | ........................................ |
| 2. மாறும் கிரயமும் நிலையான கிரயமும் | ........................................ |
| 3. நேர் மூலப்பொருள் கிரயம், நேர் ஊழியக் கிரயம் மற்றும் உற்பத்தி மேந்தலை | ........................................ |
| 4. தொடர்பான கிரயங்களும் தொடர்பற்ற கிரயங்களும் | ........................................ |

34. செயற்பாட்டு நடவடிக்கையிலிருந்தான காசுப் பாய்ச்சல்கள் என பின்வருவனவற்றை வகைப்படுத்த முடியுமா என்பதனைக் குறிப்பிடுக.

| விடயம் | ஆம்/ இல்லை |
|---|---|
| 1. ஊழியர் சேமலாப நிதி செல்மதி | |
| 2. அலுவலக வாடகைக்குச் செலுத்திய காசு | |
| 3. ஊழியர்களிற்கு செலுத்திய சம்பளங்கள் | |
| 4. பெறுமானத் தேய்வு | |

35. நிறுவனமொன்றிற்கான பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளன.

| | 2010 (ரூ.) | 2009 (ரூ.) |
|---|---|---|
| வருடத்திற்கான இலாபம் | 160 000 | 150 000 |
| வட்டிச் செலவு | 40 000 | 30 000 |
| பெறுமானத் தேய்வு | 20 000 | 20 000 |

(அ) 2010 ஆண்டிற்கான வட்டிக் காப்பு விகிதத்தைக் கணிக்க.

..............................................................................................................

(ஆ) முன்னைய ஆண்டுடன் ஒப்பிடுகையில் 2010 இல் வட்டிக் காப்பானது அதிகரித்துள்ளதா அல்லது குறைந்துள்ளதா என்பதைக் குறிப்பிடுக.

..............................................................................................................

- **36** தொடக்கம் **40** வரையிலான வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுகள் **சரி** அல்லது **பிழை** எனக் குறிப்பிடுக.

36. நிகழத்தக்க பொறுப்பானது நிதிக்கூற்றுகளில் இனங்காணப்படல் வேண்டும். (...............)

37. சமப்பாட்டுப் புள்ளியில் மொத்த விற்பனை வருமானமானது மொத்தப் பங்களிப்பினதும் மொத்த மாறுங் கிரயத்தினதும் கூட்டுத்தொகைக்குச் சமமானது. (...............)

38. எல்லா கணக்கீட்டு வெளியீடுகளையும் நிதிக்கூற்றுகள் உள்ளடக்குகிறது. (...............)

39. ஐந்தொகைத் தினத்தின் பின்னர் கம்பனியொன்றினால் பிரேரிக்கப்பட்ட பங்கு இலாபங்களானவை ஐந்தொகைத் திகதியில் பொறுப்புக்களாக இனங்காணப்படல் வேண்டும். (...............)

40. எல்லா நேர்க் கிரயங்களும் மாறும் கிரயங்களாகும். (...............)

**

[பக். 9 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 T II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2010 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2010 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2010

ගිණුම්කරණය II (II කොටස)
கணக்கீடு II (பகுதி II)
**Accounting II (Part II)**

அறிவுறுத்தல்கள் :
- ※ முதலாம் வினாவுக்கும் வேறு **நான்கு** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ※ ஒவ்வொரு விடையும் **புதியதொரு தாளில்** ஆரம்பிக்கப்படுதல் வேண்டும்.
- ※ ஒவ்வொரு பொருத்தமான செய்முறைகள் விடைகளுடன் இணைக்கப்படல் வேண்டும்.

1. வரையறுத்த ஜெறோமினி பொதுக் கம்பனியின் 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக்கூற்று அத்திகதியிலான ஐந்தொகை மற்றும் அது தொடர்பான குறிப்புகள் கீழே தரப்பட்டுள்ளன.

**31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக்கூற்று**

| | குறிப்பு | |
|---|---|---|
| தேறிய விற்பனைகள் | | 30 000 |
| விற்பனைக் கிரயம் | | 16 000 |
| மொத்த இலாபம் | | 14 000 |
| ஏனைய வருமானங்கள் | 1 | 450 |
| கழி : செலவுகள் | 2 | 7 130 |
| வரிக்கு முன்னரான இலாபம் | | 7 320 |
| கழி : வருமான வரி | | 2 928 |
| கழி : செலுத்திய பங்கிலாபம் | | 690 |
| **ஆண்டிற்கான இலாபம்** | | 3 702 |

**31 மார்ச் 2010 இலுள்ளவாறான ஐந்தொகை**

| | குறிப்பு | |
|---|---|---|
| ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள் | | 40 000 |
| நிலையான வைப்புக்கள் | | 1 000 |
| சரக்கிருப்புக்கள் | | 500 |
| வியாபாரக் கடன்பட்டோர் | | 1 980 |
| காசும் காசிற்கு சமமானவைகளும் | 3 | 40 |
| **மொத்தச் சொத்துகள்** | | 43 520 |
| கூறப்பட்ட மூலதனம் | | 31 120 |
| நிறுத்திவைத்த வருமானங்கள் | | 4 000 |
| 2-5 வருடங்களுக்குள் தீர்க்க வேண்டிய வங்கிக் கடன்கள் | | 5 600 |
| அடுத்த ஆண்டு தீர்க்க வேண்டிய வங்கிக் கடன்கள் | | 1 100 |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | | 1 500 |
| ஏனைய கொடுப்பனவுகள் | | 200 |
| **மொத்த உரிமையாண்மையும் பொறுப்புகளும்** | | 43 520 |

**குறிப்பு 1 – ஏனைய வருமானங்கள் :**

| | |
|---|---|
| முதலீட்டு வருமானம் | 175 |
| உபகரண அகற்றல் மூலமான இலாபம் | 25 |
| நிலத்தினை மீள் மதிப்பிட்டதால் ஏற்பட்ட மேலதிக தொகை | 250 |
| மொத்தம் | 450 |



[பக். 10 ஐப் பார்க்க

2. (அ) 01 ஏப்பிரல் 2010 இல் வரையறுத்த சமந்தி பொதுக் கம்பனியின் உரிமையாண்மையானது பின்வருவனவற்றை உள்ளடக்கியுள்ளது.

| | (ரூ. '000) |
|---|---|
| 500 000 சாதாரண பங்குகள் | 7 000 |
| மீள்மதிப்பீட்டு ஒதுக்கங்கள் | 2 000 |
| நிறுத்தி வைத்த வருமானங்கள் | 3 500 |

**மேலதிக தகவல்கள்:**

(i) 2010 ஜனவரி மாதத்தில் விண்ணப்பத்துடன் முழுப் பணத்தையும் பெறக்கூடியதாக பங்கொன்று ரூ. 20 விலையில் 100 000 சாதாரண பங்குகள் விநியோகிக்கப்பட்டது. 250 000 பங்குகளுக்கு விண்ணப்பங்கள் கிடைக்கப்பெற்றன. பங்குகள் விகிதாசார முறையில் ஒதுக்கப்பட்டு மேலதிக பணம் திருப்பியனுப்பப்பட்டது.

(ii) மீள்மதிப்பீட்டு ஒதுக்கமானது 3 வருடத்திற்கு முன் நிலத்தினை மீள்மதிப்பீட்டு செய்ததினால் எழுந்த மேலதிக தொகையை பிரதிநிதித்துவப்படுத்துகிறது. இவ்வாண்டில் இந்நிலமானது மீண்டும் மீள்மதிப்பீடு செய்யப்பட்டுள்ளதுடன் இதனால் ரூ. 500 000 நட்டம் ஏற்பட்டுள்ளது.

(iii) 31 மார்ச் 2010 இல் முடிவடிந்த ஆண்டிற்கான இலாபம் ரூ. 3 000 000 ஆகும்.

(iv) இவ்வாண்டில் செலுத்திய பங்கிலாபம் ரூ. 1 000 000 ஆகும்.

(v) ஒதுக்கலினை மூலதனமாக்குதல் ஆனது நிறுத்தி வைத்த வருமானங்களை பங்கொன்று ரூ. 15 பிரதி பயனில் இரண்டு பங்குகளை வைத்திருப்போருக்கு ஒரு சாதாரண பங்கு என்ற அடிப்படையில் மார்ச் 2010 இல் செய்யப்பட்டது.

**தேவைப்படுவது:**

(1) பங்கு வழங்கற் கணக்கு

(2) பிரசுரிக்கும் நோக்கத்திற்காக 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டிற்கான உரிமையாண்மை மாற்றங்களுக்கான கூற்று

(3) 31 மார்ச் 2010 இல் உள்ளவாறான பங்கு மூலதனக் கணக்கின்படி பங்கொன்றுக்கான சராசரி பெறுமதி

(4) ஒதுக்கங்களை மூலதனமாக்கியதன் காரணமாக சமந்தி கம்பனியின் நிதி நிலைமை மாற்றமடையுமா என்பதைக் காரணங்களுடன் குறிப்பிடுக.

*(05 புள்ளிகள்)*

(ஆ) பின்வரும் தகவல்கள் வரையறுத்த சுமேதா பொதுக் கம்பனியின் 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டு தொடர்பானவை.

| | (ரூ. '000) |
|---|---|
| * ஆண்டிற்கான இலாபம் | 850 |
| * பெறுமானத் தேய்வு | 100 |
| * வருட முடிவில் நடைமுறைச் சொத்துகளில் தேறிய குறைவு (காசு தவிர) | 120 |
| * வருட முடிவில் தேறிய நடைமுறைப் பொறுப்புக்களில் தேறிய அதிகரிப்பு (செலுத்த வேண்டிய வருமானம் தவிர) | 15 |
| * வருமானவரி செலவு | 400 |
| * செலுத்திய வருமானவரி | 350 |
| * இயந்திர அகற்றலின்போது ரூ. 700 000 முன்கொண்டுவரும் தொகையினைக் கொண்டுள்ள இயந்திரமொன்றை விற்றதால் பெற்ற காசு | 1 000 |
| * சாதாரண பங்கு வழங்கலால் சேர்ந்த காசு | 3 000 |
| * நிலத்தை வாங்குவதற்குச் செலுத்திய காசு | 2 000 |
| * வட்டி ரூ. 8 000 உட்பட செலுத்திய கடன் தவணைப் பணம் (இவ்வருடத்தின் ஆரம்பத்திலோ அன்றேல் இறுதியிலோ நிலுவை வட்டி எதுவுமில்லை) | 98 |
| * ஏனைய கம்பனிகளிடமிருந்து பங்குகளை வாங்குவதற்குச் செலுத்திய காசு | 1 000 |
| * பங்கிலாபம் செலுத்தியது | 600 |
| * பங்கிலாபம் பெற்றது | 80 |
| * 1 ஏப்பிரல் 2010 இல் காசு மீதி | 6 000 |

**தேவைப்படுவது:**

இ.க. நி.– 9 இன்படி 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டுக்கான காசுப் பாய்ச்சல் கூற்று.

*(05 புள்ளிகள்)*

*(மொத்தம் 10 புள்ளிகள்)*

[பக். 12 ஐப் பார்க்க

10859

3. சஞ்சிகைகளை வெளியிடும் கம்பனியொன்று இரண்டு உற்பத்தித் திணைக்களங்களையும் ($P_1$, $P_2$) ஒரு சேவைத் (S) திணைக்களத்தையும் கொண்டுள்ளது. பின்வரும் பிரசுர நடவடிக்கைகள் தொடர்பான தகவல்கள் கிடைக்கக் கூடியதாகவுள்ளது.

(i) பகிர்வு செய்யப்படாத உற்பத்தி மேந்தலைகள்

| | ரூ. |
|---|---|
| மின்சாரம் | 100 000 |
| இயந்திரப் பெறுமானத் தேய்வு | 80 000 |
| தொலைபேசிக் கட்டணங்கள் | 30 000 |

(ii) ஒவ்வொரு திணைக்களத்திற்குமான உற்பத்தி மேந்தலைகளும் ஏனைய தரவுகளும்

| | P1 | P2 | S |
|---|---|---|---|
| ஒதுக்கிய மேந்தலைகள் (ரூ.) | 37 000 | 49 000 | 29 000 |
| எதிர்பார்த்த மின்சார நுகர்வு (கிலோ வோல்ற்) | 500 | 400 | 100 |
| பாவனையிலுள்ள இயந்திரத்தின் பெறுமதி (ரூ.) | 750 000 | 50 000 | |
| தொலைபேசி அழைப்பு நேரம் (%) | 10 | 20 | 70 |
| பாதிடப்பட்ட இயந்திர மணித்தியாலங்கள் | 3 500 | 500 | – |
| பாதிடப்பட்ட நேர் ஊழிய மணித்தியாலங்கள் | 1 000 | 5 000 | 1 800 |

(iii) சேவைத் திணைக்களத்தின் (S) உற்பத்தி மேந்தலைகளானது P1, P2 என்பவற்றுக்கிடையே 1 : 5 எனும் விகிதத்தில் முறையே மீள்பகிர்தல் வேண்டும்.

(iv) உற்பத்திப் பொருட்களுக்கு P1, P2 ஆகியவைகளுக்குரிய மேந்தலைகளை முறையே இயந்திர மணித்தியாலங்கள், நேர் ஊழிய மணித்தியாலங்கள் என்ற அடிப்படையில் உறிஞ்சுதல் கம்பனியின் கொள்கையாக உள்ளது.

(v) கம்பனியினால் வெளியிடப்படும் சஞ்சிகைகளில் ஒன்றான 'ஆக்கம்', தொடர்பான தரவுகள் பின்வருமாறு:

| | |
|---|---|
| வெளியிடப்பட்டு விநியோகித்த சஞ்சிகைகளின் எண்ணிக்கை | 15 000 |
| P1 இல் பாவித்த இயந்திர மணித்தியாலங்கள் | 1 000 |
| P2 இல் பாவித்த ஊழிய மணித்தியாலங்கள் | 1 500 |
| ஏற்பட்ட மூலக் கிரயம் (ரூ.) | 205 000 |
| விநியோகத்தர்களால் திருப்பியனுப்பப்பட்ட சஞ்சிகைகளின் எண்ணிக்கை | 1 000 |
| சஞ்சிகை ஒன்றிற்கான சில்லறை விற்பனை விலை (ரூ.) | 50 |

(vi) விநியோகத்தர்கள் ஒவ்வொரு சஞ்சிகைக்கும் ரூ. 10 தரகு பெற உரித்துடையவர்கள்.

(vii) விற்பனை செய்யப்படாத சஞ்சிகைகள் கம்பனியினால் ஒவ்வொன்றும் ரூ. 20 விலையில் விற்பனை செய்யப்பட்டன.

**தேவைப்படுவது:**

(1) ஒவ்வொரு பகிர்வு அடிப்படைகளையும் தெளிவாகக் காட்டும் மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை

(2) சேவைத்திணைக்களத்தின் மொத்த மேந்தலைகளை P1, P2 என்பவற்றுக்கிடையில் மீள்பகிர்தல்

(3) P1, P2 திணைக்களம் ஒவ்வொன்றிற்குமான மேந்தலை உறிஞ்சல் வீதம்

(4) P1, P2 திணைக்களங்கள் ஒவ்வொன்றிலும் மேந்தலை உறிஞ்சல் வீதங்களைக் கணிப்பதற்கு பாவித்த அடிப்படையின் தெரிவிற்கான நியாயப்படுத்தல் ஒன்று

(5) 'ஆக்கம்' சஞ்சிகை ஒன்றிற்கான உற்பத்திக் கிரயம்

(6) வெளியீடு செய்யப்பட்ட 15 000 சஞ்சிகைகளிற்கான இலாபம் அல்லது நட்டத்தினைக் காட்டும் கூற்று.

*(10 புள்ளிகள்)*

[பக். 13 ஐப் பார்க்க

4. பின்வரும் தகவல்களானவை பாடசாலையொன்றின் வர்த்தக சங்கத்தினால் ஒழுங்கு செய்யப்பட்ட கல்விச் சுற்றுலா சம்பந்தமானவை

| | (ரூ.) |
|---|---|
| * 60 பிரயாணிகளுக்கான இருக்கைகள் கொண்ட பஸ் வண்டி ஒன்றிற்கான போக்குவரத்துச் செலவு ............ | 15 000 |
| * ஒவ்வொரு மாணவராலும் அணியப்பட வேண்டிய அடையாள அட்டை ஒன்றிற்கான செலவு ............ | 15 |
| * சுற்றுலா பதாகைக்கான அச்சடித்தல் செலவு ............ | 3 500 |
| * முழுச் சுற்றுலாவினை ஒழுங்குபடுத்துவதற்கான செலவு ............ | 2 500 |
| * மாணவர் ஒருவருக்கான சாப்பாட்டுச் செலவு ............ | 230 |
| * மாணவர் ஒருவருக்கான தண்ணீர் போத்தல்கள் செலவு ............ | 80 |
| * ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள எல்லா இடங்களையும் பார்ப்பதற்கு மாணவர் ஒருவருக்கான அனுமதிச் சீட்டு செலவு ............ | 75 |
| * வாடகைக்கு அமர்த்திய புகைப்படப் பிடிப்பாளருக்கான கட்டணங்கள் ............ | 3 000 |
| * மாணவன் ஒருவரிடமிருந்து பெறவேண்டிய கட்டணம் ............ | 1 000 |

சுற்றுலா மூலம் பெறப்படும் மேலதிக தொகைகளை வர்த்தக சங்கத்தின் பொது நிதியில் செலவு வைப்பது எனத் தீர்மானிக்கப்பட்டது.

**தேவைப்படுவது:**

(1) சுற்றுலாவிற்கான எதிர்பார்க்கப்படும் மொத்த நிலையான செலவு

(2) சமப்பாட்டுப் புள்ளியை அடைவதற்குத் தேவையான சுற்றுலாவில் பங்குபற்றுவோர் தொகை

(3) ரூ. 6 000 மேலதிக தொகையைப் பெறுவதற்குத் தேவையான மாணவர்களின் எண்ணிக்கை

(4) சுற்றுலாவிற்கான நிலையான செலவைக் குறைக்க முடியாது எனக் கருதி வர்த்தக சங்கத்திற்கு மாற்ற வேண்டிய தொகையினை அதிகரிப்பதற்கான **இரண்டு** ஆலோசனைகள்

(5) 60 மாணவர்கள் மாத்திரம் சுற்றுலாவில் கலந்து கொள்வார்களாயின் சுற்றுலாவிற்கான மேலதிக தொகை அல்லது பற்றாக்குறையைக் காட்டுவதற்கான கூற்று

(6) சமப்பாட்டுப் புள்ளியை 30 மாணவர் எண்ணிக்கையுடன் அடைவதற்கு மாணவர் ஒருவரிடமிருந்து அறவிட வேண்டிய கட்டணம்

*(10 புள்ளிகள்)*

5. (அ) பின்வரும் தகவல்கள் உற்பத்திக் கம்பனி ஒன்றினால் பயன்படுத்திய மூலப்பொருட்கள் தொடர்பானவை.

(i) 12 000 கிலோ சிக்கனக் கட்டளைத் தொகையானது (EOQ) மறுகட்டளைத் தொகையாகப் பாவிக்கப்படுகிறது.

(ii) ஒரு கட்டளை இடுவதற்கான கிரயம் ரூ. 300 ஆகும்.

(iii) மூலப்பொருளின் வருடாந்தப் பாவனை 120 000 கிலோ

(iv) யூன் 2010 மாதத்திற்கான மூலப்பொருள் பெறுவனவுகள் விநியோகங்களின் சுருக்கம்.

| திகதி | விவரம் | தொகை (கிலோ) | குறிப்பு |
|---|---|---|---|
| யூன் 1 | மிகுதி | 5 000 | 1 000 கிலோ, கிலோ ஒன்று ரூ. 15 படி மே 10 இல் கொள்வனவு<br>4 000 கிலோ, கிலோ ஒன்று ரூ. 20 படி மே 25 இல் கொள்வனவு |
| 8 | விநியோகங்கள் | 2 000 | |
| 10 | பெறுவனவுகள் | 12 000 | கிலோ ஒன்று ரூ. 25 படி |
| 30 | விநியோகங்கள் | 10 000 | |

(v) 30 யூன் 2010 இல் மூலப் பொருட்களின் பௌதிக இருப்பு 5200 கிலோ ஆகும்.

(vi) கம்பனியானது மூலப்பொருள் விநியோகத்தினை விலையிட 'முதல் உள்ளே முதல் வெளியே' முறையினைப் பயன்படுத்துகிறது.

**தேவைப்படுவது:**

(1) 2010 யூன் மாதத்தில் செய்யப்பட்ட விநியோகங்களிற்கான மூலப் பொருட்களின் மொத்தக் கிரயம்

(2) களஞ்சிய பேரேட்டின்படி 30 யூன் 2010 இலுள்ள மூலப் பொருள் இருப்பின் கிரயம்

(3) 30 யூன் 2010 இல் மூலப்பொருட்களின் பௌதிக மீதியும் பேரேட்டு மீதியும் வேறுபடுவதற்கான **இரண்டு** சாத்தியமான காரணங்கள்

(4) சிக்கனக் கட்டளைத் தொகை மாதிரியின்படி இம்மூலப் பொருட்களிற்கான வருடாந்த இருப்பு வைத்திருத்தற் கிரயம்

*(05 புள்ளிகள்)*

[பக். 14 ஐப் பார்க்க

(ஆ) பின்வரும் தகவல்கள் வரையறுத்த அம்ருத் பொதுக் கம்பனி தொடர்பானவை

(i) 31 மார்ச் 2010 இல் முடிவடைந்த ஆண்டுக்கான தெரிவு செய்யப்பட்ட சில சொத்துகள், வருமானம், செலவுகள்

| | (ரூ.) |
|---|---|
| சராசரி கடன்பட்டோர் | 60 000 |
| சராசரி சரக்கிருப்பு | 80 000 |
| விற்பனைக் கிரயம் | 400 000 |
| மொத்தச் சொத்துகள் | 270 000 |
| மொத்த விற்பனைகள் | 540 000 |

(ii) 31 மார்ச் 2009 இல் முடிவடைந்த ஆண்டுக்கான தெரிவு செய்யப்பட்ட விகிதங்கள்

* கடன் சேகரிப்புக் காலம் 50 நாட்கள்
* சரக்கிருப்பு புரள்வு விகிதம் 4 தடவைகள்
* மொத்தச் சொத்து புரள்வு விகிதம் 1.2 தடவைகள்
* மொத்தச் சொத்துகள் மீதான வருவாய் 18%

(iii) எல்லா விற்பனைகளும் கடனிற்கு செய்யப்பட்டது.

(iv) 2010 ஆண்டிற்கான மொத்த விற்பனைகளில் தேறிய இலாபம் 10 % ஆகும்.

(v) வருடத்தில் 360 நாட்கள் உள்ளது எனக் கருதுக.

**தேவைப்படுவது:**

(1) 31 மார்ச் 2010 முடிவடைந்த ஆண்டுக்கான கடன் சேகரிப்புக் காலம், சரக்குப்புரள்வு விகிதம், சொத்து புரள்வு விகிதம், மொத்தச் சொத்துகள் மீதான வருவாய்

(2) முன்னைய வருட விகிதங்களுடன் ஒப்பிடும்போது பின்வருவனவற்றில் ஏதாவது முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதா என்பதைக் குறிப்பிடுக.

(i) திரவத்தன்மை நிலைமை

(ii) மொத்தச் சொத்து பாவனை வினைத்திறன்

(iii) மொத்தச் சொத்து மீதான வருவாய்

*(05 புள்ளிகள்)*

*(மொத்தம் 10 புள்ளிகள்)*

6. (அ) சிறிதீபன் கம்பனியானது புதிய இயந்திரமொன்றை வாங்குவதற்கான பிரேரணை ஒன்றினை மதிப்பிடுகிறது. இது தொடர்பில் பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளன.

| | (ரூ.) |
|---|---|
| இயந்திரத்தின் கொள்வனவு விலை | 140 000 |
| இயந்திரத்தை நிர்மாணிக்கும்போது அதனை வழமையான நிலைக்கு மாற்றுவதற்கான கிரயம் | 10 000 |
| மூன்றாம் வருட இறுதியில் இயந்திரத்தின் எஞ்சிய பெறுமதி | 20 000 |
| விற்பனை வருமானத்தில் வருடாந்த அதிகரிப்பு | 130 000 |
| செயற்பாட்டுக் கிரயத்தில் வருடாந்த அதிகரிப்பு | 30 000 |

இவ்வியந்திரத்தை மூன்று வருடங்கள் பயன்படுத்த எதிர்பார்க்கப்படுகின்றது.

வருடாந்தம் 10% இல் 3 வருடங்களிற்கான கழிவீட்டுக் காரணிகள்

| வருடம் | 0 | 1 | 2 | 3 |
|---|---|---|---|---|
| கழிவீட்டுக் காரணி | 1.00 | 0.91 | 0.83 | 0.75 |

**தேவைப்படுவது:**

(1) 10 % கழிவீட்டு வீதத்தில் ஆரம்ப முதலீட்டின் நிகழ்காலப் பெறுமதி

(2) முதலாம் வருடத்தில் ஏற்படும் தேறிய செயற்பாட்டு காசுப் பாய்ச்சல்கள்

(3) மூன்றாம் வருடத்தில் காசு உட்பாய்ச்சல்களும் காசு வெளிப்பாய்ச்சல்களும்

(4) 10% கழிவீட்டு வீதத்தில் முதலீட்டின் தேறிய நிகழ்காலப் பெறுமதி

(5) வருடாந்தம் 10% கழிவீட்டு வீதத்தில் இம்முதலீடு நிதிசார்ந்த வகையில் சாத்தியமானதா என்பது குறித்தான சிபார்சு

*(05 புள்ளிகள்)*

(ஆ) பல்வேறு வகை ஆடைகளை உற்பத்தி செய்யும் கம்பனியொன்றின் கிரய மூலங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

(i) துணைப்பொருட்களிற்கான கிரயம்

(ii) தையல் இயந்திரங்களின் பெறுமானத் தேய்வு

(iii) அலுவலக உபகரணங்களின் பெறுமானத் தேய்வு

(iv) துணி வகைகளின் கிரயம்

(v) தையல் இயந்திர இயக்குவோர் மாதாந்த சம்பளம்

(vi) தரக்கட்டுப்பாட்டுக் கிரயம்

(vii) விற்பனை மீது இறை கொடுப்பனவு

(viii) தையல் இயந்திரங்களிற்குப் பாவித்த எண்ணெய்

(ix) விற்பனைத் தரகு

(x) ஆடைகளின் ஏற்றுமதிக்கான கப்பல் கட்டணம்

(xi) இயக்குனர் கட்டணங்கள்

**தேவைப்படுவது:**

கீழே விவரித்தவாறு பொருத்தமான கூடுகளில் சரி (✔) அடையாளமிட்டு மேற்காணப்படும் கிரய மூலங்களை கீழ் விவரித்தவாறு வகைப்படுத்துக. உற்பத்தியல்லா கிரயங்களை 'நேர்', 'நேரில்' என வகைப்படுத்த வேண்டியதில்லை.

| கிரய விடய இலக்கம் | நேர்க்கிரயம் (D) அல்லது நேரில்கிரயம். (IND) | | மாறும் கிரயம் (VC) அல்லது நிலையான கிரயம் (FC) | | உற்பத்திக் கிரயம் (M) அல்லது உற்பத்தியல்லாக் கிரயம் (NM) | |
|---|---|---|---|---|---|---|
| | D | IND | VC | FC | M | NM |
| உ-ம்: (i) | | ✔ | ✔ | | ✔ | |

*(05 புள்ளிகள்)*

*(மொத்தம் 10 புள்ளிகள்)*

***